Bibliographic Record Target

தனவைசிய ஊழியன். -- மலர் 1, இதழ் 1 (Sept. 8, 1920)- . –
காரைக்குடி : [சொ. முருகப்பசெட்டியார்], 1920-
v. : col. ill. ; 28-43 cm.
Weekly.
In Tamil.
Editor: சொ. முருகப்பசெட்டியார்
Continued by: ஊழியன்
Record No. 148

Tanavaiciya ūliyan. -- Malar 1, ital 1 (Sept. 8, 1920)- . –
Kāraikkuti : [Co. Murukappacettiyār], 1920-
v. : col. ill. ; 28-43 cm.
Weekly.
In Tamil.
Editor: Co. Murukappacettiyār
Continued by: Ūliyan
Record No. 148

# List of issues filmed

## ஊழியன்

மலர் 17, இதழ் 7 (Aug. 13, 1937)
மலர் 17, இதழ் 8 (Aug. 20, 1937)
மலர் 17, இதழ் 9 (Aug. 27, 1937)
மலர் 17, இதழ் 10 (Sept. 03, 1937)
மலர் 17, இதழ் 11 (Sept. 10, 1937)
மலர் 17, இதழ் 12 (Sept. 17, 1937)
மலர் 17, இதழ் 13 (Sept. 24, 1937)
மலர் 17, இதழ் 14 (Oct. 01, 1937)
மலர் 17, இதழ் 15 (Oct. 08, 1937)
மலர் 17, இதழ் 16 (Oct. 15, 1937)
மலர் 17, இதழ் 17 (Oct. 22, 1937)
மலர் 17, இதழ் 18 (Oct. 29, 1937)
மலர் 17, இதழ் 19 (Nov. 12, 1937)
மலர் 17, இதழ் 20 (Nov. 19, 1937)
மலர் 17, இதழ் 21 (Nov. 26, 1937)
மலர் 17, இதழ் 22 (Dec. 03, 1937)
மலர் 17, இதழ் 23 (Dec. 10, 1937)

*Continued ...*

*மலர் 17, இதழ் 24 (Dec. 17, 1937)*
*மலர் 17, இதழ் 25 (Dec. 24, 1937)*
*மலர் 17, இதழ் 26 (Dec. 31, 1937)*
*ஊழியன் தை இதழ் (Jan. 14, 1938)*
*மலர் 17, இதழ் 37 (May 05, 1938)*
*மலர் 17, இதழ் 38 (May 12, 1938)*
*மலர் 17, இதழ் 39 (May 19, 1938)*
*மலர் 17, இதழ் 40 (May 26, 1938)*
*மலர் 17, இதழ் 41 (June 02, 1938)*
*மலர் 17, இதழ் 42 (June 09, 1938)*
*மலர் 17, இதழ் 43 (June 16, 1938)*
*மலர் 17, இதழ் 44 (June 23, 1938)*
*மலர் 17, இதழ் 45 (June 30, 1938)*
*மலர் 18, இதழ் 1 (July 07, 1938)*
*மலர் 18, இதழ் 2 (July 14, 1938)*
*மலர் 18, இதழ் 3 (July 21, 1938)*
*மலர் 18, இதழ் 4 (July 28, 1938)*
*மலர் 18, இதழ் 5 (Aug. 04, 1938)*
*மலர் 18, இதழ் 6 (Aug. 11, 1938)*
*மலர் 18, இதழ் 7 (Aug. 18, 1938)*

*Continued ...*

*மலர் 18, இதழ் 8 (Aug. 25, 1938)*
*மலர் 18, இதழ் 9 (Sept. 01, 1938)*
*மலர் 18, இதழ் 10 (Sept. 08, 1938)*
*மலர் 18, இதழ் 11 (Sept. 15, 1938)*
*மலர் 18, இதழ் 12 (Sept. 22, 1938)*
*மலர் 18, இதழ் 13 (Sept. 29, 1938)*
*மலர் 18, இதழ் 14 (Oct. 06, 1938)*
*மலர் 18, இதழ் 15 (Oct. 13, 1938)*
*மலர் 18, இதழ் 16 (Oct. 20, 1938)*
*மலர் 18, இதழ் 17 (Oct. 27, 1938)*
*மலர் 18, இதழ் 18 (Nov. 03, 1938)*
*மலர் 18, இதழ் 19 (Nov. 10, 1938)*
*மலர் 18, இதழ் 20 (Nov. 17, 1938)*
*மலர் 18, இதழ் 21 (Nov. 24, 1938)*
*மலர் 18, இதழ் 22 (Dec. 01, 1938)*
*மலர் 18, இதழ் 23 (Dec. 08, 1938)*
*மலர் 18, இதழ் 24 (Dec. 15, 1938)*
*மலர் 18, இதழ் 25 (Dec. 22, 1938)*
*மலர் 18, இதழ் 26 (Dec. 29, 1938)*
*மலர் 18, இதழ் 27 (Jan. 05, 1939)*

Continued ...

மலர் 18, இதழ் 28 (Jan. 12, 1939)
மலர் 18, இதழ் 29 (Jan. 19, 1939)
மலர் 18, இதழ் 30 (Jan. 26, 1939)
மலர் 18, இதழ் 31 (Feb. 02, 1939)
மலர் 18, இதழ் 32 (Feb. 09, 1939)
மலர் 18, இதழ் 33 (Feb. 16, 1939)
மலர் 18, இதழ் 34 (Feb. 23, 1939)
மலர் 18, இதழ் 35 (Mar. 02, 1939)
மலர் 18, இதழ் 36 (Mar. 09, 1939)
மலர் 18, இதழ் 37 (Mar. 16, 1939)
மலர் 18, இதழ் 38 (Mar. 23, 1939)
மலர் 18, இதழ் 39 (Mar. 30, 1939)

THE OOLIAN REG. NO. M. 1509.

# ஊழியன்

மலர் 17
இதழ் 7

(தேசிய சித்திர வாரப் பத்திரிகை.)

விலை அணா 2
மலாய் காசு 15

கார்த்திகேயா பிலிம்ஸின்



—சுந்திரமூர்த்தி நாயனாரில்

காந்திஜீ ராஷ்டிரபதியாக வேண்டுமா ?

வரப்போகும் ராஷ்டிரபதி யார் ?

அரசியலுலகம்

துக்காராம்

சந்யாசமா ? காதலா ?

13—8—1937.

# ஊழியன்

ஆசிரியன்—ராய. சொக்கலிங்கன்.

மலர் கஎ. சென்னை, ஈசுவர ஆடிமீ 29உ வெள்ளி (13-8-1937) இதழ் எ


இந்தியத்தாய் முடிசூடி எழிற்சிங்கா
 தனமேறி ஈடிலாது
சொந்தவர் சேபுரியத் துயர்போக்கி
 யாவருமே சுகவாழ் வெய்த
இந்நிலம் வந்தவருள் இலைபிறப்பில்
 இழிவுயர்வென் இயற்கை ஓங்க
கந்தலிலா வூழியமே நான்கொண்
 நல்லனவெந் நாளும் வாழ்க![டேன்

## பதவியின் பயன்

பதவியின் பயன் இன்னது என்பதை அறிய அநேகரால் முடிவதில்லை. பெரும்பாலும் பதவி பெறுவோர், தாங்கள் பதவி பெறுவது தங்களைப் பிறர் மதிப்பது ஒன்றுக்காகவே என்றே கருதுகின்றனர். இந்த நிலைமையை அடியோடு புரட்டியடித்துவிட்டனர் இன்று காங்கிரஸ்க்காரர். பதவியைப் பற்றிய மக்களின் எண்ணத்தில் ஒரு பெரும் புரட்சியை உண்டாக்கிவிட்டனர் காங்கிரஸ் மந்திரிகள். பதவியின் பயன் இது என மக்கள் நேராக உணருமாறு சிறிது காலத்திற்குள் காங்கிரஸ் மந்திரிகள் செய்துவிட்டனர்.

ஒருவர் மந்திரியாவது, 'நான் மந்திரி'யென அவர் பெருமை பேசிக்கொள்வதற்காகவும், 'அவர் மந்திரி'யெனப் பிறர் பாராட்டுவதற்காகவுமே என்று கருதக்கூடிய நிலையிலேயே இதுகாறும் மந்திரிப்பதவி யிருந்து வந்தது. மந்திரிப் பதவியும் சேவை செய்தற்கு வாய்த்த ஒன்றுதான் என இன்றுதான் உணர்த்தப்படுகின்றது.

இந்தியாவிலுள்ள பதினொரு மாகாணங்களுள் ஆறு மாகாணங்களில் இப்பொழுது காங்கிரஸ் மந்திரிகள் ஆட்சி நடைபெறுகிறது. இது ஏற்பட்டுச் சில நாட்களே ஆகின்றன. இந்தச் சிறிது காலத்திற்குள்ளாகவே முந்திய ஆட்சிக்கும் இன்றைய ஆட்சிக்கும் உள்ள வேறுபாடு மடுவுக்கும் மலைக்கும் உள்ள அளவு காணப்படுவதை மக்கள் அநுபவத்தில் உணர்ந்தே வருகின்றனர். ஆட்சி செலுத்த இன்று அமைந்திருக்கும் சட்டம் பயனற்றது என்பது காங்கிரசின் முடிந்த கொள்கை. என்றாலும் அதற்குள்ளும் மக்கட்குச் செய்யக்கூடிய நன்மையை முடிந்தவரைச் செய்து பார்க்கலாம் என்பதே காங்கிரஸ் மந்திரிகள் கருத்து. காங்கிரஸ்க்காரர் விரும்பும் அளவைச் சிறிதுகூட அக்காரியங்களால் எட்ட முடியாதென்றாலும் முன் செய்கையை நோக்க இன்றையப் போக்கு நல்ல பயனுடையது என்பதை மறுப்பதற்கில்லை.

பதவியினால் பயன் உண்டு. எப்பொழுது? பதவி பெறுவோர் மக்கட் தொண்டே குறிக்கோளாகக் கொண்ட தியாகிகளாக அமரும்பொழுது. அந்நிலை இன்று நாட்டில் பெரும்பகுதி மாகாணங்களில் ஏற்பட்டிருக்கிறது. யானைகள் அமர வேண்டிய இடங்களில் பூனைகள் குந்திக் கொண்டிருந்தன. இன்று யானைகள் கம்பீரமாகத் தங்கட்குரிய இடங்களில் வீற்றிருந்து கடனாற்றுகின்றன என்று கூறுதல் பொருந்தும். யானைகள் புகுந்ததும் பூனைகள் நிலை யாதுவாயின என்ற கேள்விக்கு இடமேயில்லை. முன்னதைக் கண்டதும் பின்னது என்னும் என்று சொல்லவும் வேண்டுமோ? முன்னைய மந்திரிகள் என்னதாம் செய்து கொண்டிருந்தார்கள் என்பது ஒருவருக்கும் தெரியவில்லையே என்று வருத்தப்பட வேண்டுவதில்லை. அவர்கட்குத் தெரிந்ததைச் செய்துதானே இருப்பர்!

உழைப்பதற்கே பிறந்த பொதுஜன ஊழியர்மாதிரி உடம்பையும் மூளையையும் வருத்திச் சிரமப்படவேண்டும் என்பது அவர் தம் தலைவிதியல்ல. 'உழுகிற மாடு எங்கே போனாலும் ஏர் எதிரே நிற்கும்' என்பார்களல்லவா? காங்கிரஸ்க்காரர் வெளியேயிருந்தாலும் உழைக்க வேண்டுவதுதான்; செகரட்டரியேட்டுக்குள் போய் மந்திரிப் பீடத்து அமர்ந்தாலும் ஓயாது உழைத்துத் தீரவேண்டியதுதான் என்பதே விதியென்பதைக் கண்ணாரக் காண்கின்றோம். காங்கிரஸ் பதவியேற்ற ஆறு மாகாணங்களுள்ளும், சிறந்த தலைவரை—தியாகத்தின் வடிவினரை—அறிவின் நிலைக்களமானாரைப் பிரதம மந்திரியாகப்பெற்ற பேறு நமது மாகாணத்திற்கே தனியாக உரியது. அவருக்கும் நமக்கும் சில விஷயங்களில் மாறுபாடு இருக்கலாம். அது வேறு. தலைவர் இராஜகோபாலாச்சாரியாரைவிடச் சிறந்த ஒருவர் நமக்குத் தலையமைச்சராகக் கிடைக்க முடியாதென்பது நிச்சயம்.

கனம் இராஜகோபாலாச்சாரியார் தலைமையில் சென்னை மாகாண அரசாங்க நிர்வாகம் ஏறக்குறைய ஒரு மாதமாக நடைபெற்று வருகிறது. இதனால் காங்கிரஸ் ஆட்சி நாட்டில் ஏற்பட்டு விட்டதாக யாரும் மயங்கமாட்டார்கள் என்று நம்புகிறோம். காங்கிரஸ் விரும்பும் ஆட்சிக்கும், காங்கிரஸ் மந்திரிகளால் ஆளப்படும் அந்நியர் ஆக்கிய சட்டவரம்புக்கு உட்பட்ட ஆட்சிக்கும் சம்பந்தமேயில்லை. இன்றையச் சட்டங்கட்குப் புறம்பாக எந்தக் காங்கிரஸ் மந்திரியும் எதுவும் செய்துவிட முடியாது. ஆனால் சட்டத்துக்குள் நுணுகி நுழைந்து எவ்வளவு செய்யமுடியுமோ அவ்வளவும் நெறி தவறாது தயங்காது செய்வர் காங்கிரஸ் மந்திரிகள் என்று எதிர்பார்க்கலாம். அவ்வகையில் எந்த மாகாணப் பிரதம மந்திரிக்கும் சிறிதும் பின்னடைய மாட்டார் நமது தலைவர் என்பதில் எவருக்கும் ஐயம் வேண்டுவதில்லை. ஆனால் ஒரேயொரு வித்தியாசம். அவசரப்படாமல் சட்டத்தைத் துருவியாய்ந்து இடைமுறிந்து போகாதபடி அரண் செய்து கொண்டே கருமமாற்றுவதில் நமது பிரதம மந்திரி பெரிதும் சமர்த்தர்.

பதவியின் பயன் இன்னது என்பதை அவர் நமக்கு மெய்ப்பித்துக் காட்டி வருகிறார். மந்திரியாவது கேவலம் பெருமைக்காகவல்ல, அது பட்டு நாற்காலியை அலங்கரிப்பதற்காகவன்று என்பதைக் கனம் ஆச்சாரியார் உணர்த்திவிட்டார்; காலை ஒன்பது மணி முதல் மாலை ஆறுமணி வரை அப்பதவியின் மூலம் ஓயாது உழைத்துக் காட்டுகிறார் அவர். சென்ற வெள்ளிக்கிழமையன்று மாலை ஆறேகால் மணிக்கு வேலை மிகுதியால் அலுத்துப்போய் சென்னைக் கடற்கரையில் வந்து அப்படியே படுத்து அன்பர் ஆச்சாரியார் அயர்ந்து போய் விட்டதை இதனை எழுதுபவர் நேரில் காண நேர்ந்தது. இந்த முதுமைப் பருவத்தில் நாட்டுக் காதல் ஒன்றே காரணமாக அமைச்சராயமர்ந்து, சென்னையின் மந்திரிகள் சரித்திரத்திலேயே பெரிதும் புதுமையைப் புகுத்திப் பதவியின் பயனைத் தெளித்துக் காட்டும் அறிஞர் இராஜகோபாலர்க்கு நாடு மிகுதியும் கடமைப்பட்டுளது.

---

## வரப்போகும் ராஷ்டிரபதி யார்?

அடுத்த காங்கிரஸ் நடக்கவேண்டிய தேதி நிச்சயமாகிவிட்டது; இடம் முன்னரே உறுதிப்பட்டு விட்டது. தலைவர் தேர்ந்தெடுக்கவேண்டிய நாட்களும் குறிப்பிடப்பட்டு விட்டன. ஆனால் தலைவர்மட்டிலும் யாரென எவரும் அறியார்!—

காங்கிரஸ் தலைவரை அறிவது முக்கியமான ஆசையல்லவா? ஆகவே தேசம் முழுதும் ஒரு கொந்தளிப்பு ஏற்பட்டிருக்கிறது! யார் வரக்கூடுமென்று பத்திரிகைகளும், தலைவர்களும், நிருபர்களும் மெல்லப் பேசிக் கொள்கிறார்கள்.

அந்த வேளையில் யுனைடெட் பிரஸ் ஒரு தகவலை வெளியிட்டிருக்கிறது. அதற்கு, சுபாஷ்பாபு ராஷ்டிரபதியாக வேண்டுமென்பது விருப்பம் போலும். ஆதலால் காந்திஜீக்கும் சுபாஷ் பாபுவுக்கும் கடிதப் போக்குவரத்து நடைபெறுவதாகச் செய்தி சொல்கிறது.

இந்தச் செய்தி எவ்வளவு தூரம் உண்மையென்று தெரியவில்லை. ஆயினும் 14-ந் தேதி நடைபெறப் போகும் காரியக் கமிட்டிக் கூட்டத்தில் தலைவர்கள் முதல்தடவையாக அடுத்த ராஷ்டிரபதியைப்பற்றிப் பேசிக் கொள்வார்கள் என்று சொல்லப்படுகின்றது.

பாபு சுபாஷ் வரவேண்டுமென்பது பலருடைய நீண்ட ஆசை தான்; அவருடைய தியாகமும் தகுதியுடையதே. ஆயினும் அவருக்கிருக்கும் ஆதரவுப் பெருக்கைப் பற்றிய சந்தேகமொன்று மெல்ல (இலேசாக) உலாவுவதுண்மை. எப்படியும் (யுனைடெட் பிரசை நம்பி) வார்த்தாவை எதிர்பார்ப்போம்.

---





# அரசியல் உலகம்

"கோபி"

### வருகுது ஹிந்தி!

சிறு பிராயத்தில், (மாணவப் பருவத்தில்), ஹிந்தியைக் கற்பியாது வயது வந்த பின் "அதைப்படி, படி" என்று சொன்னால் எவ்வளவு பெரிய கஷ்டம்!

இக் கஷ்டத்தை யொழிக்க சென்னைக் காங்கிரஸ் மந்திரிசபை யொரு வழி செய்யப் போகிறது; மாகாணத்திலுள்ள எல்லாப் பாடசாலைகளிலும் ஒன்று, இரண்டு, மூன்று பாரங்களில் ஹிந்தியைக் கட்டாயப் படிப்பாகப் புகுத்தப்போகிறது. நான்கு, ஐந்து, ஆறு பாரங்களில் பலபல பாடங்கள் புதிதாகப் புகுத்தப்படுவதால் அங்கு ஹிந்தியையும் நுழைக்க முடியாது. இதனை ராஜாஜி 11-ந் தேதி நடைபெற்ற ஒரு ஸ்ரீ ராமகிருஷ்ண மிஷன் மாணவர் விடுதியின் சங்க ஸ்தாபனத்தின்போது அழகாக எடுத்துரைத்தார்.

### உருது லிபி மந்திரி

ராஜாஜி பேசும்போது,—சின்னாட்களுக்குமுன் உருது லிபி மந்திரி எனப் பெயரெடுத்த ஸ்ரீ கலிபுல்லா ஒரு அபூர்வப் போடுபோட்டாரல்லவா? அதனை-அலசி எடுத்து விட்டார். "லிபிக்காக எவரும் சண்டை போட வேண்டியதில்லை. முஸ்லிம்கள் விரும்பினால் உருது லிபியில் படிக்கட்டும். இந்துக்கள் விரும்பினால் தேவநாசரியில் கற்கட்டும். லிபி வித்யாசத்தைத் தவிர பாஷையில் எவ்வித வித்யாசமும் கிடையாது" என்றார் ராஜாஜி. அவர் கனம் கலிபுல்லாவின் பெயரை குறிப்பிட்டுப் பேசவில்லையானாலும் ஒவ்வொரு வார்த்தையும் சென்னையிலிருந்து திரிச்சிக்கு டிக்கட் வாங்குவதாயிருந்தது.

### முஸ்லிம்களே குதியுங்கள்!

அது எப்படியாவது போகட்டும். காங்கிரஸ் மந்திரிகளின் காலத்தில் இந்தி படிக்க விரும்புபவர்களும், முஸ்லிமாகப் பிறந்தும் இந்துஸ்தானி தெரியவில்லையே என்று ஏங்குபவர்கட்கும், விசேஷமாக நம் மரக்காயர்கட்கும் யோககாலம் வந்து விட்டது.

*　*　*

### விவசாயிகள் வேண்டுதல்

பெரும்பான்மையும் விவசாயமே தொழிலாகவுடைய இந்திய நாட்டில் ஒரு நல்ல சர்க்காருக்கு குடியானவர்களின் குறைகளை முதலில் பரிஹரிப்பதைவிட வேறு வேலை இருக்க முடியாது. அதனை உன்னியே அன்று ஐக்கிய மாகாணத்தில் முதன் முதலில் சட்டசபை கூடியபோது, கொடியேற்று விழாவாற்றிய ராஷ்டிரபதி, 'குடியானவர் வயிற்றில் எரியும் பசித்தீயை முதலில் அவியுங்கள்' என்று எச்சரிக்கை செய்தார். பண்டிதர் கூற்றுப்படி நடாத்தப் பல காங்கிரஸ் சர்க்கார்கள் முயன்று வருவதாய் அறிகிறோம். ஆயினும் சற்று விரைவு படுத்துவது என்று கருதினார்கள் போலும் பாடலீபுத்ரத்து கிஸான் சங்கத்தார்.

### ஆறு கோரிக்கைகள்

9-ந் தேதியன்று மேற்படி பாடலீபுத்ரத்து மாகாண கிஸான் சங்கம் தோழர் ஜயப்பிரகாஷ் நாராயணனின் தலைமையில் ஒரு கூட்டம் நடாத்தியது—அதில், (1) ஐந்து வருடம் எல்லா விவசாயக் கடன்களையும் நிறுத்திவைக்கவும் (2) வட்டிக்கு வட்டி வாங்கும் வழக்கத்தை ஒழிக்கவும் (3) விவசாயிகட்கு சௌகரியமான கடன் கிடைக்கவும் (4) நிலங்களிலுழைக்கும் கூலிகட்கு நிச்சயமான ஒரு சம்பளத்தைக் குறிப்பிடவும் (5) ஐக்கிய சங்கங்களைத் திருத்தியமைக்கவும் (6) ஐக்கியப் பண்ணை முறையை வழக்கப்படுத்தவும் தகுந்த வழியில் காங்கிரஸ் மந்திரிகள் சட்டமியற்றவேண்டுமென்ற தீர்மானம் நிறைவேற்றப்பட்டது. அப்பால் சட்டசபை கூடும் தேதியில் தம் கோரிக்கைகளை நிர்ப்பந்திப்பதற்காக சட்டசபை மண்டபம் வரையிலும் ஊர்வலம் நடத்துவதென்றும் முடிவு செய்யப்பட்டது.

இவ்வாறு கிசான்கள் தம் கோரிக்கையை நன்றாக வெளியிடட்டும். ஆனால் மந்திரிகளைத் தொல்லைப்படுத்தும் முறையிலும், காங்கிரசிற்குக் குந்தகம் செய்யும் முறையிலும் நடந்துகொள்ளக் கூடாது என்று கோருகிறேன்.

*　*

### ஜயப்பிரகாஷ் வருவார்

வார்தாவில் 14-ந் தேதி காரியக் கமிட்டிக் கூட்டம் நிகழும்போது தோழர் ஜயப்பிரகாஷ் கண்டிப்பாக விஜயம் செய்வார் என்று தெரிகிறது. இதற்காக பண்டித நேரு கடிதமெழுதியுள்ளாராம்.

பண்டிதர் கடிதமனுப்பியது எதற்காகவிருந்தாலும் சரி, அபேதவாதிகளின் கருத்தை அதன் தலைவர் காரியக் கமிட்டியில் எடுத்துச் சொல்லவேண்டுவது அவசியத்திலும் அவசியம். அவரைப் பின்பற்றியவர்களென்றும் சொல்லும் சில சிறு "குஞ்சு சோஷலிஸ்டுகள்" ஊருக்குள் என்னென்னமோ சொல்லிக் குழப்பம் செய்து திரிவதைப் பொறுக்க முடியவில்லை. அந்த சோஷலிஸ்டு நபர்களாவது தோழர் ஜயப்பிரகாஷர் வருகை மூலம் காரியக் கமிட்டியின் இயல்பை அறிந்து கொள்ளட்டும்.

*　*　*

### எல்லைக் காந்தியும் தொல்லைக் காந்தியும்

தொல்லை (பழைய) காந்தியாகிய மகாத்மா வைஸிராயைச் சந்தித்த பின்னர், வடமேற்கு மாகாணத்தில் அவரும் (அடிகளும்) எல்லைக் காந்தியாகிய காபர்கானும் புகும் உரிமை கிடைத்து விடுமென்று எதிர்பார்த்திருந்தோமல்லவா? அது இன்னும் நிறைவேறவில்லை; ஆயினும் மத்திய சர்க்காருக்கும் எல்லைப்புற கவர்னருக்கும் கடிதப் போக்குவரத்து நடைபெறுவதாய்த் தெரிகிறது. அது முடிந்த தடை நீங்குவதும் இருகாந்தி

களும் எல்லைப்புற மாகாண அரசியல் மகாநாட்டுக்கு விஜயம் செய்வார்கள். அவர்களோடு நேருஜியும் போகலா மென்று யூகிக்கப்படுகிறது. அப்படியாயின் எல்லைப்புறம் எவ்வளவு பெரிய பாக்கியத்தை அடையப் போகிறது என்று பாருங்கள்! மூன்று மாபெருந் தலைவர்கள் ஒரே சமயத்தில் விஜயம் செய்வதென்றால் அம்மம்மா! இதுவும் காங்கிரஸ் மந்திரி யுகத்தின் மாட்சிதான் போலும்!

• • •

## வங்காள ஓட்டர்கள்!

வங்காள சட்டசபையில் ஆகஸ்ட் 10-ந் தேதி மந்திரிகளின் சம்பளம் சம்பந்தமாக ஒரு சட்டம் கொண்டு வரப்பட்டது. அதில் முதன் மந்திரிக்கு 3000-ம் இதர மந்திரிகட்கு 2500-ம் சம்பளம் கொடுக்கவேண்டு மென்றும், கார் அலவன்சாக 100 ரூபாயும், வீட்டு வாடகைக்காக 300 ரூபாயும் கொடுக்க வேண்டுமென்றும் குறிப்பிடப்பட்டிருந்தது. இதுபற்றி பல ஆக்ஷேபங்கள் கிளர்ந்து அவை திருத்தங்களாக மாறின. முடிவாக அன்று (10-ந் தேதி) எதுவும் தீர்மானமாகவில்லை. ஆனால் தற்போது அதிகாரத்திலிருக்கும் புரோஜாக் கட்சிமீது அதன் உறுப்பினர்கட்கே வயிறு முட்ட எரிச்சலிருக்கிறதென்பது வெளியாயிற்று. மறைமுகமாக பஸ்லுல்ஹக்கைக் குறிப்பிட்டு, ஒரு புரோஜா மெம்பர் 'அவரை தொகுதியை விட்டே உதைத்துத் தள்ள வேண்டும்' என்றாராம். இத்தியாதி பேச்சுகளைக் கவனிக்கும்போது மந்திரிகள் 3000-ம் 2500-ம் பெறும்படி விடப்படுவார்களாவென்பது புரியவில்லை. ஒருகால் சட்டம் நிறைவேறி விட்டால், வங்காள ஓட்டர்கள் தற்போதிய மந்திரி சபையை பாதாளத்தில்குழிதோண்டி மூட முயலவேண்டுவது கடமை. காங்கிரஸ் மந்திரிகள் 500 ரூபாய் விகிதம் 6 மாகாணத்தில் வாங்கிக் கொண்டிருக்க, வங்காளத்தில் மட்டிலும் 3000 ரூபாய் வாங்கிக்கொள்வதா? அம்முறை மாகாணத்திற்கே அவமான மல்லவா!

• • •

## அவமானம்! அவமானம்!!

ஸ்பெயின் போர் நிலைமை இங்கிலாந்தைச் சற்றிலும் அவமான மூட்டை மலைபோல் குவித்து கொண்டிருக்கிறதென்று பலமுறை எழுதியிருக்கிறேன். இன்னும் அதுபோல திரும்ப எழுத வேண்டியதாகிறது. சென்ற வெள்ளிக்கிழமையன்று காலையில் "பிரிட்டிஷ் கார்ப்பொரல்" என்ற ஒரு பெரிய இங்கிலீஷ் கப்பல் ஸ்பெயினண்டை ஓடிக்கொண்டிருந்தபோது மூன்று ராக்ஷச விமானங்கள் வந்து குண்டாலடித்துத் துரத்தின. 'கார்ப்பொரல்' எப்படியோ தப்பிற்று. அதற்கு முன் மற்றொரு ஆங்கிலக் கப்பலை செவிலையைப் பிடித்திழுத்துக் கொண்டு போனார்கள் கலகக்காரர்கள். இன்றுவரும் செய்தியால் ஒரு பிரஞ்சு விமானத்தின் மீது பிராங்கோ கோஷ்டி குண்டெறிந்ததாகத் தெரிகிறது. இப்படியே ஒரு சிறு பிராங்கோ செய்துகொண்டிருப்பதை பெரிய இங்கிலீஷ் சிங்கம் பார்த்துக் கொண்டும் பொறுத்துக் கொண்டுமிருப்பதென்றால் அதற்கு 'சரணை' யிருக்கிறதென்று சொல்ல முடியுமா? ராஜ தந்திரமானாலும்கூட அதற்கு மொரு எல்லை வேண்டாமா?

## எவ்வளவு நாள் ஜம்பம்

பிராங்கோ ஜம்பம் எவ்வளவு நாள் நடக்கும் என்பது முடிவு செய்யப்படும் நாள் வந்துவிட்டது என்கிறார் ஒரு பிரபல வர்த்தகர். பிராங்கோவினால் இன்னும் மூன்று மாதம்கூட சமாளிக்க முடியாதாம். ஏனெனில் அவருக்குக் கீழிருக்கும் மக்கட்கு போதுமான உணவுப் பொருட்களை அவரால் வழங்க முடியவில்லையாம். ஜெர்மனியோ இதாலியோ 'சப்ளை' செய்யலாமென்றால்—எத்தனை நாள் தான் செல்லும்? நாள் போகப் போக பாஸிஸ்ட் நாடுகள் தயங்குகின்றனவாம். —அப்பால் மேற்படி வர்த்தகர், பிராங்கோ தோல்வியுறுவார் என்பதற்கு மற்றொரு காரணம் சொல்கிறார். ஸ்பெயின் சர்க்காருக்கு தினந்தினம் ஆள் உதவி பெருகிக் கொண்டிருக்கிறதாம்.

## இரு ஸ்பெயின்கள்

இத்தகைய காரணங்களால், பிராங்கோ கையில் கிடைத்ததைக் கொண்டு திருப்திப்படுகிற முறையில் தாம் பிடித்துக்கொண்ட பூமியைத் தம்மிடம் விட்டுவிட்டு, ஸ்பெயின் சர்க்கார் (வலன்ஷியா சர்க்கார்) வைத்திருக்கும் பூமியை அவர்களே ஆளும்படி விட்டுவிட ஏற்பாடு செய்ய வேண்டுமென்று இங்கிலாந்து பிரான்ஸ் ஆகிய நாடுகட்கு செய்தி விட்டிருக்கிறாராம். மேலே குறித்த வர்த்தகர், பிராங்கோவை இவ்வாறு கேட்கும்படி தூண்டிவிட்டவர்கள் ஆங்கிலேயரே என்று சொல்கிறார்.—எவ்வளவு லக்ஷணம் இது! ஆங்கிலேயர்கள் ஒரு காலத்தில் அபிசீனியாவையும் இப்படித்தான் பிரிக்கப் பார்த்தார்கள்! பாவம்! தம் பிரிந்தாளும் குணத்தை எங்கெல்லாம் புகுத்துகிறார்கள், பார்த்தீர்களா!

## பழைய ஆவலா?

சென்னையில் சிறை மந்திரியாக இருப்பவர் திரு. ராமன் மேனன் என்பதை நேயர்கள் மறந்திருக்க முடியாது. அவர் இந்த வாரம் வேலூர் முதலிய ஜெயில்களைச் சுற்றிப் பார்த்தார். அங்கு அவருடைய பழைய நண்பர்கள் பலர் இருந்தார்களாம். அவர்களைப் பார்த்துப் பேசினார். ஒருகாலத்தில் அவரை கைதியாக நடத்திய வார்டர்களெல்லாம் இப்போது மந்திரியென்ற முறையில் வணக்கம் செய்தார்கள். அப்பால் அங்கிருந்த வங்காள ராஜீயக் கைதிகள் ஐவரோடு நீண்ட நேரம் வார்த்தையாடினார். அந்த வேளையில் பழைய வாசனை வந்துவிட்டது போலும்! சிறை சமையற்காரர்களிடம் சமைத்துப் போடச் சொன்னார். சமையலை அவரும் சில கைதிகளும் உண்டார்கள். அப்பால் சிறையைப் பார்வையிடுகையில் கைதிகட்கு சப்ளை செய்யப்படும் துணிகளெல்லாம் நல்ல தரமாகவிருக்க வேண்டுமென்றாராம்.

இந்த தமாஷ்களெல்லாம் எப்படியாவது போகட்டும். அங்குள்ள கைதிகள் தம்மைப்போன்ற ஒரு பெரிய கைதி மந்திரியாகி, தம்மைப் பரிசோதிப்பதை எண்ணி எண்ணி சிரிப்பார்களல்லவா? காந்தியுகத்தின் புதுமையே புதுமை!

—



சிறு கதை




# சந்யாசமா? காதலா?

'தனுசு'

"சந்திரா! ஏது இந்த வேளை இந்தத் தெருவில், எங்கு செல்கிறாய்?"

சந்திரன் நடுங்கினான். அவன் மனம் பகீர் பகீர் என்று அடித்துக்கொண்டது. "அம்மம்மா!, ஒருவரும் காணாமல் நடந்த விஷயத்தை இன்று சந்யாசி கண்டு விட்டாரே" என்று பெருமூச்சு விட்டான். அவன் மனம் குழம்பிய குழப்பத்தைச் சொல்ல முடியாது. வார்த்தைகள் சரியாக வரவில்லை.

இந்நிலைமையைக் கண்ணுற்ற சந்யாசி "சந்திரா! குழம்பாதே. தைரியமாய்ப் பேசு. இந்தத் தெருவில் நீ நடமாடுவதைக்கண்ட பின்னரும் யோசிப்பானேன்? நல்ல சந்தனம், வாசனைமிக்க செண்ட், கையில் பலஹாரம், உடம்பில் ஆடம்பர ஆடை, விரலில் மோதிரம் ஆகியவற்றோடு—கல்யாணத்திற்குத் தயாரான மாதிரியில் தாசித் தெருவில் வந்திருக்கும் நீ யோசிக்கவும் வேண்டுமா? சொல் உன் அபிலாஷையை" என்றார் மீண்டும்.

சந்திரனால் சமாளிக்க முடியவில்லை. சந்யாசியைப் பார்த்து நோக்கினான். அவரது கருணை உருவான கோமள சரீரமும், மனதைக்கவரும் மலர்ந்த முகமும், அறிவும் இரக்கமும் வழிந்தொழுகும் பார்வையும், புனிதம் மிக்க புன்னகையும் அவனது மனதை ஈர்த்தன. உடன் குழம்பியவாறே, "சாமி மன்னிக்க வேண்டும். உள்ளத்தைக் கவர்ந்து எழுந்தோங்கிய ஆசையால் யாவும் செய்கின்றேன். சாந்தாமணியை ஒருமுறை பார்த்தால் உயிருள்ளளவும் மறக்கமுடியாது. பெரும் ஞானியரும் பேசாமோனிவரும் மதிமயங்கும் அழகினள் அவள். அவளை விட்டுப்பிரிய என்னால் இயலவில்லை; அவளும் என்னை விட்டகல மனமில்லாதவள்" என்றான்.

சந்யாசி:—நல்லது. உன் ஆசையைத் தடை செய்ய நான் முயலவில்லை. ஆனால் ஒன்று: அவள் தாசி என்பதை நினைத்துகொள். உன் மெய்க்காதல் பொய்க்காதலாகும் காலம் அதிக தூரத்திலிராது.

என்றவாறே சந்யாசி நெடுக நடந்தார். அவர் வாய் சில மந்திரங்களை ஜபித்தது போலும்; இருள் மூடிய தெருவில் நின்று நோத்தில் மறைந்தார்.

• • •

போதானந்தர் என்ற பெயருடைய அந்த புத்த சந்யாசி பர்ஹாம்பூரின் வடகோடியில் ஒரு மடத்தைக்கட்டி அதில் பல சீடர்களுடன் வசித்து வருகிறார். நல்லொழுக்கமும், நற்சிந்தையும், நற்போதனையுமுடைய அவரை அவ்வூரில் அறியாதாரில்லை. அவர் வந்த பின்னர் பர்ஹாம்பூர் வாசிகள் பல ஆயிரவர் புத்த மதத்தை மேற்கொண்டனர். அவ்வாறு சந்திரன் பௌத்தனாகவில்லையாயினும் போதானந்தரின் பரம பக்தர்களில் ஒருவனானான்.

• • •

சந்யாசி அவனுக்கு உபதேசித்து மறைந்ததும் சந்திரன் சற்றுநேரம் அவர் போனவழியையே பார்த்துக்கொண்டு நின்றான். அவன் மனதில் ஞானவொளி வீசுவதுபோலிருந்தது. ஆனால் சற்று நேரத்திற்குள் காந்தாமணியின் அழகுக் காந்தி மனதில் வீசவே, ஞானக்காந்தி ஒளி கெட, காந்தத்தின் வழி இயங்கலானான். அவளை நினைக்க நினைக்க அவளது சோமன முகமும், குளிர்ந்த பார்வையும், கோகிலத் தொனியும், கொஞ்சும் பேச்சும் அவன் இருதயத்தைக் கசக்கிப் பிழிந்து சாறெடுத்துப் பொட்டுப் போட்டுக்கொண்டது. எனவே "விறுவிறு" என நடந்து காந்தாமணியின் வீட்டை நண்ணினான்.

அவ்வீட்டை அடையும்போதெல்லாம் அவன் முன்வாயில் வழி செல்வதில்லை. காரணம் ஊரார் மீதுள்ள பயமே. ஆதலால் கொல்லைப்பக்க வாயிலை நாடி ஒரு ஜன்னல் வழியாக உள்ளே பிரவேசிக்க முயன்றான். அப்போது அடியில்வரும் சம்பாஷணை காதில் விழுந்தது:—

காந்தாவின் தாய்:—மாதம் 300 ரூபாய் கொடுத்திடுங்கோ. மாறிப்பேசவில்லை. இப்போதிருப்பவர் 150 ரூபாய்தான் கொடுக்கிறார். ஆனால் ஆள் மகா சுந்தரன். அன்றி நல்லவர். காந்தாவும் அவரை அதிகமாக விரும்புகிறாள்.

ஒரு ஆடவர்:—மாதம் 300, 400 என்று பேரம் பேசவேண்டாம். இப்போது 3000-க்கு நகை போடுகிறேன். பிறகு மாதச் செலவு என்னோடு. நீங்கள் இரண்டு பேரும் இங்கேயே இருங்கள்; நான் ஆக்ஷேபிக்கவில்லை. ஆனால் வேறொரு ஆடவன் வரக்கூடாதென்பதை மட்டிலும் தெரிந்துகொள்.

தாய்:—எங்கள் தாசிகளானாலும் மற்றவர்களைப்போல மணிக்கொரு புருஷன், தினத்திற்கு 10 கணவன்—இப்படி வரவழைப்பவர்களல்ல. எங்கள் அந்தஸ்து, ஒழுங்கு எல்லாம் வேறு மாதிரிதான். நீங்கள் வந்து போயிருப்பதில் ஆக்ஷேபணையேயில்லை. ஆனால் தொகையை மட்டிலும் முதலில் பேசிவிடுங்கள். ஒருமுறை பேசிவிட்டால் அப்பால் அதுபற்றித் தகராறில்லை.

இந்த விதமான பேச்சைக் கேட்டதும் சந்திரனின் மனம் நெருப்பா யெரிந்தது. "என்ன என் உயிர்போன்ற காந்தாவையா இன்னொருவனிடம் ஒப்படைக்கப்போகிறாள்" என்று எண்ணினான். எண்ண எண்ண, மேற்படி சம்பாஷணைக்குச் செவி சாய்க்கச் சாய்க்க, கோபம் தலையைத் தூக்கிக் கொண்டு மேலெழுந்தது. உடன் காந்தாவின் தாயையும், பேரம்பேச வந்திருப்பவனையும் கத்தியால் குத்திவிடுவதென்று முடிவு செய்து உள்ளே குதித்தான். ஒரு நிமிஷத்தில் வாயுவேகமாக சம்பாஷணை நடக்குமிடத்திற்குப் பறந்து போனான். போனதும் என்ன ஆச்சரியம்! அங்கிருந்தவர் யார் தெரியுமா? அவ்வூர் சப்கலெக்டர்!

சட்டென்று வெளியே பாய்ந்தான் சந்திரன். நேராக நடந்தான் தன் வீடு நோக்கி. அவன் மனம் அப்போது எப்படியிருக்கும்? ஓராயிரம் கேள்வியால் நிறைந்து சிதைந்தது சிந்தை!

• • •

சுமார் மணி பத்து. போதானந்தர் மடத்தில் அனைவரும் தூங்கிவிட்டனர். அவர் (போதானந்தர்) மட்டிலும் தூங்கவில்லை. ஏதோ தியானத்திலிருந்தார் போலும்.

அப்போது வந்தான் சந்திரன். வந்தவன் ஒன்றும் பேசாது சந்யாசி காலில் விழுந்து வணங்கினான். "சந்யாசம் வேண்டும்" என்றான்.

போதா:—புத்தி வந்ததா?

சந்தி:—தங்கள் வார்த்தையை அனுபவத்தில் பார்த்துவிட்டேன். என்னைப் புறக்கணியாது ஏற்றுக் கொள்ள வேண்டும்.

என்று எழுந்திருந்தான். பார்த்தார் சந்யாசி அவன் முகத்தை! அவன் சபலமனம் அவர் கண்ணுக்குத் தெரிந்தது. உடன் "சந்திரா உன் படிப்பினைக்கு இரங்கினேன். நாளை இந்நேரத்தில் வா. அந்த வேளையிலும் உன் மனம் சன்மார்க்கத்தை விரும்புமானால் அப்படியே செய்கிறேன்" என்றார்.

• • •

ஒரு மாதம் சென்றது. சந்திரன் புத்த சந்யாசியின் சிஷ்யனாகிவிட்டான். பூர்வாங்கச் சடங்குகள் யாவும் நடைபெற, முழு 'ஞானஸ்நானத்தை' கயாவில் நடத்துவதென்று முடிவு செய்யப்பட்டது.

போதானந்தருக்கு அவன் மீது அபாரப் பற்று. சந்திரனும் லௌகிக காரியங்களில் கவனம் செலுத்தாது போதானந்தர் வழிபற்றி ஆன்மீக உலகிலேயே சுற்றலானான்.

இவ்வாறு 30 நாளானதும் போதானந்தரும் சந்திரனும் நெடுக கயா சென்றார்கள். அங்கு வந்த பல்லாயிர பௌத்த சந்யாசிகளுள் போதானந்தர் ஒருவர்தாமாயினும் சந்திரனை மதமாற்றம் செய்ய வந்திருப்பதால் அவருக்கு பிராபல்யம் கிடைத்தது. ஆலயத்து சந்யாசிகள் முற்றிலும் ஞானஸ்நானத்தைப் பற்றிப் பேசிக்கொண்டார்கள். சந்திரனுக்கும் பெருமையே. அவனைப் பலப்பலர் புகழ்ந்தனர்.



அப்படியிருக்க, ஒருநாள் ஞானஸ்நானச் சடங்கு ஆரம்பித்தது. பூர்வாங்கமாக சந்யாசித் தலைவர் செய்யவேண்டுவனவெல்லாம் செய்யப்பட்டன. அப்பால் சந்திரன் தோற்றி தான் பௌத்த மதம் விரும்புவதாகச் சொல்லவேண்டிய தருணம் வந்தது. அப்போது ஆச்சரியம்! ஒருவர் தோற்றி சந்திரனிடம் ஒரு காகிதத்தைக் கொடுத்தார். அதில், "ஒரு உயிரைக் காப்பாற்றும் செயல் பௌத்தர்கட்கு பூஷணமாயிருக்குமானால், நீங்கள் தனிமையில் ஒரு சில நிமிஷங்கள் கோவிலுக்கு வெளியேயிருக்கும் ஆலமரத்தண்டை வந்து போகவேண்டும்" என்று எழுதப்பட்டிருந்தது. உடன் சந்திரன் மெல்ல எவருக்கும் தெரியாது வெளிக்கிளம்பினான். சந்யாசிகள் விஷயம் தெரியாதவர்களாதலால் சடங்குகளை முறையே செய்து கொண்டிருந்தார்கள்.

சந்திரன் நேராகக் குறிப்பிட்ட ஆலமரத்தண்டை சென்றான். சென்றதும் அவன் கண்ணெல்லாம் பொய்யாக! அங்கு ஒரு மங்கை, சர்வாபரண பூஷிதையாக, அழகுப் பேடகமாக நின்று கொண்டிருந்தாள். அவள் யார்! காந்தாமணியின்றி வேறு யாருமில்லை.

காந்தாவைக் கண்டதும் அவன் மனம் தூக்கி வாரிப் போடப்பட்டது. "காந்தா! நீ எங்கு வந்தாய்!" என்றான்.

அவள் சட்டென்று கையைப் பிடித்துக்கொண்டு "என்னைக் கைவிடுவீர்களா? சந்யாசம் கொள்வீர்களா?" என்று விம்மி விம்மி அழுதாள். பார்த்தான் சந்திரன். அலையில் விழுந்த உப்புக்கட்டி மாதிரியானான்.

"காந்தா! அழாதே! நீ எப்படி வந்தாய்? யார் துணை வந்தார்கள்?" என்றான்.

அவள்:—(நெடுநேரத்தின் பின்) யாரும் வரவில்லை. நானே தனியாக வந்தேன். தங்களைப் பற்றி ஊருக்குள் விசாரிக்க, புத்தகயா சென்றுவிட்டதாகவும் சந்யாசம் கைக்கொள்ளப் போவதாகவும் கேள்விப்பட்டேன். உடன் புறப்பட்டு வந்துவிட்டேன்.

சந்தி:—உன் தாய்?

காந்தா:—தெரியாது.

சந்தி:—(மூக்கில் விரலைவைத்து நெடுநேரம் யோசித்துவிட்டு) நீ என்ன செய்யவேண்டுமென்கிறாய்?

காந்தா:—சந்யாசம் கொள்ளலாகாது; என்னை ஏற்றுக்கொள்ளவேண்டும். இன்றேல் பெண்ணைப் பலிசெய்த பாவம் இக்கணமே உங்களைச் சேரும்.

நெடுநேரம் யோசித்தான் சந்திரன். அவன் மனம் குழப்பக்கடலில் மிதந்து சென்று, சபலமென்னும் பாறையில் மோதியுடைந்து ஆழ்ந்தது. ஒரு பக்கம் பார்த்தான்; ஞானஸ்நானச் சடங்கு தடபுடலாக நடந்து கொண்டிருந்தது. மற்றொரு புறம் நோக்கினான்; காந்தாவின் காந்திமிக்க முகம் பிரகாசித்தது. இன்னொரு பக்கம் உற்றுப் பார்த்தான். அங்கு "தாசி தாசி" என்று பொறிக்கப்பட்டிருந்தது. பிறிதொரு பக்கம் நோக்கினான். அங்கு "சந்யாசமே மோக்ஷம்! அதுவே நிரந்தர இன்பம்" என்று எழுதப்பட்டிருந்தது.

இவற்றிற்கிடையில் என் செய்வான்! பாவம்!

• • •

நெடுநேரத்தின் பின்னர், "காந்தா! நாளை இந்நேரம் வா. என் மனம் இப்படியிருந்தால் உன்னோடு வந்து விடுகிறேன்" என்றான்.

• • •

அதற்குள் சந்யாசிகள் அவனைத் தேடி வந்துவிட்டார்கள். அவன் நேராக ஆலயத்திற்குள் சென்றான். அங்கு சடங்கில் மூழ்கியிருந்தோர், 'ஏன் இத்தனை நேரம், ஏன் இத்தனை நேரம்?" என்று நூற்றுக்கணக்கில் கேள்வி கேட்கத் தொடங்கிவிட்டார்கள். அதுகண்ட அவன் "நாளைகின்று ஞானஸ்நானம் செய்கிறேன்" என்றான். இதன் பொருள் ஒருவருக்கும் தெரியவில்லை. போதானந்தர் திணறினார்.

அடுத்த நாள் மாலை சரியாக மணி 4 ஆனதும் ஆலமரத்தண்டை தோற்றினாள் காந்தாமணி. சந்திரன் முன்னாடியே வந்துவிட்டான் போலும். அவன் முகம் கவலை நிரம்பியிருந்தது. காந்தா "ஏன் கவலைப்படுகிறீர்கள்?" என்று பன்முறை கேட்டாள். அவன் பேசவில்லை. பிறகு "ஊருக்குப் போவோமா?" என்றாள். அதற்கும் பதிலில்லை. அதன்மேல் சுமார் அரைமணி நேரத்திற்குப்பின் "ஏன் மௌனமாக விருக்கிறீர்கள்? போவோம்" என்று கையைப் பிடித்திழுத்தாள். அப்பால் எழுந்திருந்தான் சந்திரன். அவன் மனதில் "சந்யாசமா, பெண்ணா?" என்ற கேள்வி பெரிய எழுத்தில் எழுதப்பட்டிருந்தது. காந்தாவின் கேள்விக்கு என்ன விடை சொல்வதென்று விளங்கவில்லை. எனவே எழுந்திருந்து "கையைவிடு காந்தா! என் விடையை இதோ யோசித்து வருகிறேன்" என்று கூறி சற்று தூரம் சென்றான்.

அங்கு மரங்கள் அடர்ந்திருந்தன.

அங்கு அவன் சென்றதும் ஏதோ ஒருவிதமான சத்தம் எழுந்தது. உடன் ஓடிப்போனாள் காந்தா! ஆ! அங்கு சந்திரனுக்குப் பதிலாக அவனது பிணம் ஒரு கயிற்றில் தொங்கிக்கொண்டிருந்தது. இடையில் தொங்கவிடப்பட்டிருந்த ஒரு காகிதத்தில் "இதுதான் விடை" என்ற எழுத்துக்கள் மிளிர்ந்தன.

• • •

இன்று காந்தாமணி தனக்காக சந்திரன் எந்த மதத்தைத் தழுவ நினைத்தானோ அந்த மதத்தைச் சார்ந்த ஒரு சந்யாசினியாக கயாவில் வசிக்கிறாள்.

# காந்திஜீ ராஷ்டிரபதியாக வேண்டுமா?

## ஸ்ரீ. சத்தியமூர்த்திக்கு ராமாநந்த சாட்டர்ஜீயின் பதில்

கழிந்த மாதத்தில் திரு. சத்திய மூர்த்தி அசோஷியேட் பிரஸ் வாயிலாக ஓர் அறிக்கை வெளியிட்டிருந்தார். அதில் மகாத்மா காந்தியை அடுத்த காங்கிரஸ் தலைவராய்த் தேர்ந்தெடுக்க வேண்டுமெனவும், மந்திரிப் பதவியேற்றிருக்கும் இந்நெருக்கடியான சமயத்தில் அவரது ஆலோசனைகள் பேருதவியாயிருக்குமெனவும் குறிப்பிட்டிருந்தார். அவ்வறிக்கையின் சார்பில் எவரும் எவ்விதமான அபிப்பிராயத்தையும் வெளியிடவில்லை. ஆனால் "மாடர்ன் ரெவ்யூ" ஆசிரியர் அதற்குத்தகுந்ததோர் விடையளித்திருக்கிறார். அஃது கீழ் வருமாறு:—

திரு. எஸ். சத்தியமூர்த்தி ஜூலை 8-ந் தேதி அசோஷியேட் பிரஸ் இந்தியா, வாயிலாகக் கீழ்வரும் அறிக்கை விடுத்திருக்கிறார்:

"அடுத்துவரும் காங்கிரஸ் மகாசபைக்கு மகாத்மா காந்தியை தலைமைப் பதவி ஏற்றுக்கொள்ளுமாறு வேண்டிக் கொள்ளவேண்டும். அடுத்த வருடத்தில் காங்கிரஸ் மந்திரிகள் மிக நெருக்கடியான அரசியல் நிலைமைக்கு ஆளாவார்கள். அப்போது காங்கிரஸ் தலைவர் என்ற ஹோதாவில் காந்திஜீயின் ஆலோசனைகள் அவர்கட்குப் பேருதவியாயிருக்கும். பதவி ஏற்றல் தீர்மானத்தின் பிரதான கர்த்தா மகாத்மாவே யாகையால் காங்கிரஸ் மந்திரிகட்கு வழிகாட்டி, அவர்கட்கு அவ்வப்போது ஆலோசனை கூற அவரே தகுதி வாய்ந்தவராவார். காங்கிரஸ் நிர்வாகப் பொறுப்பு அவர் கையிலிருக்குமாகில் மாகாணக் கவர்னர்கள் காங்கிரஸ் மந்திரிகளின் வேலைகளிற் குறுக்கிடு முன் பல தடவை யோசிப்பார்கள்; தயங்குவார்கள். தவிர காங்கிரஸ் மந்திரிகள் அவரது தலைமையின் கீழ் புத்துயிர்பெற்று ஊக்கத்துடன் வேலை செய்வார்கள். எதற்கும் மேலாக வசீகரத் தன்மைவாய்ந்த அவரது தோற்றம் இதர ஐந்து மாகாணங்களிலுமுள்ள சிறுபான்மைக் காங்கிரஸ் கட்சிகளை பெரும்பான்மைக் காங்கரஸ் கட்சிகளாக மாற்றிவிடும். இதுவே தேசத்தின் தற்போதைய முக்கியமான பிரச்னையாகும். அடுத்த வருஷம் மகாத்மா காங்கிரஸ் தலைவரென்ற ஹோதாவில் ஓர் அகில இந்தியச் சுற்றுப்பிரயாணஞ் செய்வாராகில் தேச முழுதும் புத்துயிர்பெற்று விடும். மாகாணச் சுயஆட்சி உண்மையான சுயாட்சியாகவே மாறிவிடும். ஐக்கிய அரசியல் அமைப்புத் தோற்றம் உயிரற்ற குழந்தைப் பேறுபோல் ஆகிவிடும். மீண்டும் போர் தொடங்காமலே சுயராஜ்ய லட்சியத்தையடைந்துவிடலாம். ஆகையால் இந்தியாவிலுள்ள காங்கிரஸ்காரர்கள் எல்லோரிடத்திலும் இத்தீர்மானத்தை ஆதரிக்க வேண்டுமென்று கேட்டுக் கொள்கிறேன்."—A. P. I.

மகாத்மா காந்தி காங்கிரசின் தினசரி நடவடிக்கைகளில் கலந்து கொள்ளாமல் விலகிக்கொண்டிருக்கிறார். நெருக்கடியான சில சந்தர்ப்பங்களிலும், சில இன்றியமையாத சமயங்களிலுமே காந்திஜீ தமது ஆலோசனைகளைச் சொல்லி வருகிறார். அல்லது அச்சமயங்களில் தலைவர்கள் அவரைக்கலந்து முடிவுசெய்து கொள்கின்றனர். ஒரு வருடத்துக்கு காந்திஜீ காங்கிரஸின் தலைமைப் பதவியைப் ஏற்றுக்கொள்வாரானால், அப்பதவிஏற்புக்குச் சில நாட்களுக்கு முன்பாகவே தமது அ. இ. கிராமக் கைத்தொழில் சங்க வேலைகளை விட்டு விட்டுத் தற்போது பண்டித ஜவஹர்லால் நேரு செய்வதைப்போல் தமது முழுச் சமயத்தையும் காங்கிரஸ் நடவடிக்கைகளைக் கவனித்து வருவதிலேயே செலுத்திக் கொண்டிருக்க வேண்டும். காந்திஜீ அவ்வாறு செய்வதற்கு இசைந்திருந்தாலும் அல்லது இனிமேல் இசைந்தாலும், நாம் திரு சத்யமூர்த்தியின் ஆலோசனைக்கு ஆதரவு அளிப்போம். காங்கிரஸ் தலைவர்கள் எல்லோரிலும் காந்திஜீயே மிகுந்த அறிவுள்ளவர். அவரது கருத்துகள் எல்லாவற்றிற்கும் நாம் இசையவில்லை என்றாலும் காங்கிரஸை நிர்மாணித்தவர்களில் அவர் எவருக்கும் இளைத்தவரல்ல.

(24-ம் பக்கம் பார்க்க)

### ஐ. மா. அசம்ப்ளி தலைவர்



ஐக்கிய மாகாண அசம்ப்ளி தலைவராக பாபு புருஷோத்தம்தாஸ் தாண்டன் தேர்ந்தெடுக்கப் பட்டிருக்கிறார்.

டிபுடி தலைவராக பீகம் ஐஜாஸ் ரஸூல் தேர்ந்தெடுக்கப்பட்டார். இவர் பாஞ்சாலத்தில் பெயரெடுத்த சர் ஜிபிகர் அலிகானின் புதல்வி.

இப்போது ஐ. மாகாணத்தில் ஒரு பெண் மந்திரியும் பெண் தலைவரும் அமைந்திருப்பது குறிப்பிடத் தகுந்தது.



தொடர் கதை

# ரத்நப்பிரபா

(ஈ.சி.)

(சென்ற வாரத் தொடர்ச்சி)

சென்றவாரம், துவஜேந்திரர் எவ்வளவோ கேட்டுக்கொண்டாலும், யாரோ சிலர் நந்தி மில்ஸ் கிளார்க்குகளில் சிலரை அடித்து, இயந்திரங்களை உடைத்தார்கள் என்றும், ஆகவே சாத்வீக வேலை நிறுத்தம் செய்த தொழிலாளர்களிடையே குழப்பமேற்பட்டதென்றும், அத்தருணத்தில் போலீசார் தோற்றி துப்பாக்கிப் பிரயோகம் செய்தார்களென்றும் கூறினேன்.

பல நாட்களாக மனமார அகிம்சா முறையில் வேலை நிறுத்தம் செய்த எண்ணாயிரவர்களிடையே எப்படியோ குழப்பம் வந்துவிட்டதென்றால் அவர்கள் மனம் எவ்வாறுதான் எரியாது! ஒவ்வொருவரும் விழித்தனர். 'என்ன நடந்தது, என்ன நடந்தது' என்று தத்தம் பக்கத்தில் நிற்பவர்களைக் கேட்டுக் கொண்டார்கள். துவஜேந்திரரும், அமரநாதனும், இதர நிர்வாகஸ்தர்களும் பட்டபாடு கொஞ்சமல்ல. பலநாள் பராமரித்து, வளர்த்து, பெரு மரமாகிவிட்ட தங்கள் முயற்சி ஒரு நிமிஷத்தில் பாழாகிவிட்டதே யென்று ஏங்கினார்கள்.

அந்த வேளையில் போலீசார் என்ன செய்து கொண்டிருந்தனர்!—அவர்கள் கூட்டத்தில் புகுந்து துப்பாக்கிப் பிரயோகம் செய்ததும், கல்லைக் கண்ட காகம் போல எல்லோரும் நாலாப்பக்கமும் ஓடினார்கள். புத்தியுள்ள தொழிலாளர் பலர் தரையில் படுத்துக்கொண்டு, 'புரட்சி வாழ்க' என்று கத்தினார். நிர்வாகஸ்தர்கள் போலீசாரை நெருங்கி, "சுடவேண்டாம்; உங்கள் கருத்து எதுவெனக் கூறுங்கள்! அதன்படி தொழிலாளர்களை நடத்துகிறோம்" என்றார்கள். அதற்குள் 'புலிகள்' சும்மாவிருக்குமா? சிலர் நூற்றுக்கணக்கான தொழிலாளிகளைக் கைதுசெய்து, கடுகத்துணை நேரத்தில் பறந்து வந்த மோட்டார் லாரிகளில் போட்டு சிறைக்குக் கொண்டுபோனார்கள். வேறு சிலர் நிர்வாகஸ்தர்கள்மீது நடவடிக்கை யெடுத்துக்கொள்ளும் நோக்கத்தோடு கையொப்பம் வாங்கினார்கள். இன்னும் சிலர் இயந்திரங்களை அண்மி அங்கு ஏற்பட்டிருந்த நாசத்தைக் கண்டு மகஜர் எழுதினார்கள். மற்றுஞ் சிலர் அடிபட்ட கிளார்க்குகளிடம் வாக்குமூலம் வாங்கிப் பல தொழிலாளிகள்மீது குற்றம் சாட்டினார்கள்.

இவ்வாறு ஒரு பெரும் போலீஸ் வேட்டை நடைபெற்றதன்மேல் ஜில்லா மாஜிஸ்திரேட் மில்லைப் பூட்டி அனைவரையும் வெளியே துரத்திவிட்டு ரிசர்வ் போலீஸ் காவல் போட்டார். துவஜேந்திரர் முதலியோர் மீது தொழிலாளிகளை ஏவிவிட்டு "கலாட்டா" செய்ததாக வழக்கு ஆரம்பிக்கப்பட்டது. மில்லுக்குக் காவல் நின்ற போலீசார், முதலாளிகள் தவிர வேறு எந்த மனிதனேனும் மில்லை நெருங்கினால் சுடலாம் என்று அதிகாரம் நல்கப்பட்டார்கள்.

• • •

வாசகர்காள்! இதன் பொருளென்ன? வேலை நிறுத்தம் ஒருவாறு ஒழிக்கப்பட்டு விட்டது என்பதன்றோ? ஆதலால் முதலாளிகள் எவ்வாறு சந்தோஷப்படக்கூடும்? கோபிநாத், சாந்தாராம் முதலியோர் திவான்பகதூர் முராஹரிதாசை எவ்வளவுதான் புகழமாட்டார்கள்? முராஹரிதாஸ் எவ்வளவு தூரம்தான் மருமகனைச் சிலாகிக்க மாட்டார்!

ஆம்—மணிபூஷணனும் ரத்நாகரனும் எல்லையில்லா சந்தோஷம் கொண்டார்கள். தொழிலாளி கோபிநாத் வாய்கொண்டமட்டும் புகழப்பட்டான்! அப்புகழ்ச்சி, கைதானவர்களிடையே கோபிநாத் அகப்பட்டுக்கொள்ளவில்லை என்று தெரிந்ததும் பல ஆயிர மடங்கு வளர்ச்சியுற்றது.

அதன்மேல் என்ன? வேலை நிறுத்தத்தை அடக்கிவிட்டதால் ரத்நப்பிரபாவின் அபிமானம் மணிபூஷணனுக்குக் கிடைத்துவிட்டதா? பிரபாசங்கர் தான் மணிபூஷணனைப் புகழ்ந்து விடுவாரா? மாட்டார் என்பது ரத்நாகரனுக்குத் தெரியும். ஆகவே ரத்னாகரன் அடியில் வருமாறு சொன்னான்:—

"மணிபூஷன்! நமக்கு முழுவெற்றி கிடைத்து விட்டதாக நினைத்துவிடவேண்டாம். தொழிலாளர்களில் சிலரை சிறைக்குத்தான் அனுப்பியுள்ளோமே தவிர அவர்கள் ஒடுக்கப்பட்டு விடவில்லை. வழக்குத் தொடரப்பட்டிருப்பவர்கள் வெளிவந்தாலும் வந்துவிடலாம். அவர்கட்கு வெளிமாகாணத் தலைவர்களின் உதவி கிடைத்து நிலைமைமாறி வந்தாலும் வந்துவிடலாம். அப்பால் பார் மணிபூஷணா! அமரநாத் கேஸில் சிக்கிக் கொண்டானா? இல்லையே.

அவன்தானே நம் பகைவன்? கேஸ் ஒருகால் மும்முரமாக நடைபெற்றால் அவன் தப்பிவிடலாமே! மேலும் ரத்னப்பிரபாவுக்கு அவன் மீதுள்ள அபிமானம் குன்றியிருக்கிறதா?

இவ்வாறு ரத்நாகரன் பேசியதும் மணிபூஷன் மனம் பூரிக்கவில்லை.

அவன்:—நண்பா! இன்னும் என்ன செய்யவேண்டுமென்கிறாய்?

ரத்நா:—நம் முதலாளி வர்க்கத்தின் கனியாக விருந்துகொண்டிருக்கும் பிரபாசங்கரை ஒழிக்கவேண்டும். அந்தப் பழி அமரநாத்மீது ஏறவேண்டும். அதன்மூலம் அவன் கொலைக் குற்றத்திற்காளாகி அந்தமான் செல்லவேண்டும். இதனையே நான் கோபிநாதிடம் சில தினங்கட்கு முன்னரே மறைமுகமாக வற்புறுத்திக் கூறினேன்.

இவ்வாறு ரத்நாகரன் உறுதியாகக் கூறியதும் மணிபூஷன் சில நிமிஷ நேரம் ஆழ்ந்து யோசித்தான். அவன் முகத்தில் துணிச்சலும் சந்தோஷமும் இலங்கின. உடன் கோபிநாதுக்கு ஆள் விட்டான்.

கோபிநாத் வந்து பணிந்ததும், மணி:—கோபிநாத் உன் திறத்திற்கு மனமகிழ்ந்தேன். மதன்பாக் தப்பிதத்தை உடைத்தெறிந்து வெற்றிக்கொடி நாட்டிவிட்டாய்! இன்னும் நீ செய்யவேண்டியது ஒன்று பாக்கியிருக்கிறதல்லவா?

கோபிநாத்:—(மகிழ்ச்சியால் பூரித்துக்கொண்டே வணங்கி) எஜமான் சித்தம் என் பாக்கியம்! ஆணையிட்டால் இதோ இந்த நிமிஷமே வேண்டுவதைச் செய்கிறேன்.

ரத்நா:—கோபிநாதரே! இன்று இரவு தொழிலாளர் நிர்வாக கமிட்டிக் கூட்டம் நடைபெறுகிறது. அமர்நாத் கூட்டத்திற்குச் சென்று, எல்லோரும் போனபின் தன் வேலைகளை முடித்துக்கொண்டு தனியாகத் திரும்புவான். அதுபோது பிரபாசங்கர் உடம்பு அவனண்டை நடுரோடோரம் கிடக்கவேண்டும். இதோ அதற்கான கைத்துப்பாக்கி (என ஒன்றைக் கொடுத்தான்.)

கோபிநாத் துப்பாக்கியை வாங்கிக் கொண்டான். ஆனால் பிரபாசங்கரை எவ்வாறு இரவில் நடுரோடுக்குக் கொண்டுவருவது என வழி தெரியவில்லை. தயங்கினான். அதுகண்ட மணிபூஷணனும் ரத்நாகரனும் ஏதோ சிறிது நேரம் யோசித்துவிட்டு கோபிநாதிடம் "இரவு 9 மணிக்கு தயாராக இங்கு வா. நாங்கள் சொல்கிறபடி செய். அதற்குமுன் தொழில் சங்கத்து லெட்டர் பேப்பர், ஏதாவது ரிக்கார்டு புத்தகங்கள் முதலியவற்றை எடுத்து வா?" என்றனர்.

• • •

இரவு சரியாக மணி 9. மணிபூஷணனும் ரத்நாகரனும் முந்தியவன் வீட்டில் ஓர் அறையில் இருக்கின்றனர். இரகசியம் இரகசியமாக இருவரும் ஏதேதோ பேசிக்கொள்வதால் முகத்தில் பரபரப்பும், நடுநடுக்கமும் விளையாடிக் கொண்டிருக்கின்றன. அவர்களது பேச்சு வேறு ஒருவருக்கும் கேட்கவில்லை.

சரியாக மணி 9–15 ஆனதும் கோபிநாத் தோற்றினான். கருப்புச் சட்டை—கருப்பு வேட்டி—அவனை மறைத்திருந்தன. ரத்நாகரன் கொடுத்த கைத்துப்பாக்கி அவன் இடையில் பதுங்கியிருந்தது. முகத்தில் மறத்தைத் தவிர வேறில்லை.

அவனைக் கண்டதும், அவனைப்போலவே துணிச்சல் செறிந்திருந்த முகத்தோற்றமுடைய நண்பர்கள் ஒரு சிறிது ஏதோ பேசிக்கொள்ள, அவர்களில் ஒருவனான ரத்நாகரன், நேராக டெலபோனண்டை சென்றான். 'கய்டை'ப் பார்த்துவிட்டு பிரபாசங்கர் வீட்டுக்கு 'ரிங்' செய்தான். சில நிமிஷங்களுள் அங்கிருந்து பதில் வரவும், "சார்! தொழிற்சங்கத்திலிருந்து நான்—அமரநாத் பேசுகிறேன். இரவு 11 மணிக்கு எங்கள் நிர்வாகசபைக் கூட்டம் முடியும். —அதன்மேல் தங்களிடம் மில் விஷயமாக தனிமையில் சற்றுப் பேசவிரும்புகிறேன். தயவுசெய்து மறுக்காமல் இங்குவரை வந்து செல்வீர்களா! தங்கள் புதல்விக்கு நான்செய்த உதவியை உன்னி என் வேண்டுகோளை மறுக்காதிருக்குமாறு கேட்டுக்கொள்கிறேன்.—சில சொல்ல முடியாத காரணங்களால் எனக்கு தங்கள் வீட்டுக்கு வரமுடியவில்லை. ஆகவே மன்னித்துவிட்டு நீங்களே இங்கு வரமுடியுமா?" என்றான். பிரபாசங்கர் உண்மையில் அமரநாதனே மில் சம்பந்தமாகப் பேச விரும்புகிறானென்று கருதி, "ஆகட்டும்; அப்படியே வருகிறேன்" என்றார்.

அப்பால் ரத்நாகரன் தொழிற் சங்கத்திற்கு போன் செய்தான். செய்து அங்கு அமர்நாதைக் கூப்பிட்டு பிரபாசங்கர் பேசுகின்ற மாதிரியில், "நண்பரே! தங்களிடம் 11 மணிக்கெல்லாம் மில் சம்பந்தமான சில காரியங்களையும், என்னைப் பற்றிய சில தகவல்களையும் சொல்ல விரும்புகிறேன். சீக்கிரம் நிர்வாகக் கூட்டத்தை முடித்துவிட்டு எனக்காக தனிமையில் காத்திருங்கள். அல்லது வழியே சென்றாலும் கண்டுகொள்கிறேன்" என்றான். அமரநாதனும் பிரபாசங்கரே தன்னுடன் பேசுவதாகக் கருதி, "அப்படியே தங்கட்காகக் காத்திருக்கிறேன்" என்றான்.

அப்பால் ரத்நாகர் கோபிநாதைப் பார்த்து, "கோபிநாத் எல்லாம் தயாராகிவிட்டது. நீ வெளியே செல், ரோடோரம் பதுங்கியிரு. சரியாக மணி 11-க்கு இருவரையும் காண்பாய். கண்டதும் பிரபாசங்கரை சுட்டுவிடு. ஆபீஸிலிருந்து எடுத்து வைத்திருக்கும் காகிதம் புஸ்தகம் எல்லாவற்றையும் பிணத்தண்டை போடு" என்றான்.



கோபிநாத் "ஆகட்டும்" என்று கூறி வெளியே போனான்.

போனவன் நினைப்புச் சாத்தியமாகும் முறையில் அமரநாத் ஆபீஸைவிட்டு சரியாக 11-5க்கு வெளிக்கிளம்பி ரோடு வழியாகத் தனிமையில் நடக்கலானான். பிரபாசங்கரும் ஆபீசையண்மி அமரநாதைத் தேடிவிட்டு, ரோடுவழியாகச் சென்றார். சிறிது தூரத்தில் இருவரும் சந்தித்தனர். அவர்கள் தாம் ஏன் சந்திக்க நேரிட்டது என்று பேசிக்கொள்ளாமலே வார்த்தையாடி நடந்தனர். அப்போது திடீரென் ஒரு வெடிச் சத்தம்! பிரபாசங்கர் பொத்தென விழுந்தார். உடனே அமரநாத் அவரைத் தாங்கிக்கொண்டு முதற்சிகிச்சை செய்யப் பார்த்தான்.

மறு நிமிஷம் பாருங்கள்! என்ன ஆச்சரியம்! ஓடி வந்தனர் சில போலீசார்! அவர்கள் வரக் காரணம் இரவில் கேட்ட வெடிச் சத்தமே; அவர்கள் கண்ணுக்கு பிரபாசங்கர் பிணமும், பக்கத்தில் அமரநாதின் நிலையும் அவனண்டை தொழிற்சங்க ரிக்கார்டு சிலவும் தெரிந்தது. உடன் அவனைக் கைது செய்து யாதொன்று ஒன்று எழுதினார்கள்.

அதிகமேன்? ஊர் முழுதும் மறுநாள் பொழுது புலருமுன், சாத்விக வேலை நிறுத்தம்செய்த தொழிலாளிகள் பலாத்காரத்திலிறங்கி மில்லையும் முதலாளிகளையும் அழிக்க ஆரம்பித்துவிட்டார்கள் என்ற பெயர் வியாபித்தது.

(தொடரும்)

# சென்னையில் போர் முழக்கா?

## சேலம் பாரிஸ்டருக்கு சிறிய பதில்

"வசு"

ஜூலை 29-ந் தேதியிட்ட "தமிழ் முரசு" சென்னை மாகாணத்தில் காங்கிரஸ் மந்திரிகட்கெதிராக ஏதோ ஒரு பிரமாதமான யுத்தம் நிகழ்ந்து கொண்டிருப்பதாய் 'போர் முழக்கம்' என்னும் தலைப்பின் கீழ் ஒரு கட்டுரை (தலையங்கம்) எழுதியிருக்கிறது. வெளி நாடுகளில் வசிக்கும் அன்பர்கள் அத்தலையங்கத்தைப் படித்துவிட்டு பெரிதும் மனம் குழம்பிப் போக வழியுண்டு. ஆனால்,

தயவு செய்து அப்படி யாரும் குழம்ப வேண்டாமென்று கேட்டுக் கொள்கிறேன். சென்னையில் காங்கிரஸ் மந்திரிகட்கெதிராக யாரும் எந்த ஆயுதமும் ஏந்தி எழுந்திருக்கவில்லை. அவ்வாறு செய்யவேண்டிய சந்தர்ப்பமு மேற்பட்டிலது. மந்திரி சபை அமைதியாகவே பல ஆக்க வேலைகளைச் செய்துகொண்டிருக்கிறது. ஜஸ்டிஸ் கட்சியார்கள் ஒருவருக்குப்பின் ஒருவராக காங்கிரசில் சரண் புகுந்துகொண்டிருக்கிறார்கள். எவரேனும் காங்கிரசுக்கு எதிராகக் கூச்சல் போடுகின்றார்களென்றால் அன்னோர் பழைய ஜஸ்டிஸ் கட்சியின் உடைந்துபோன துண்டுகளாகவே இருக்கவேண்டும்.

• • •

தமிழ் முரசின் ஆசிரியர் சேலம் பாரிஸ்டரான திரு. எஸ். வி. ராமசாமி என்கின்ற ஒருவரின் கட்டுரையொன்றை மனமார நம்பிவிட்டார் போலும்; ஆகையினாலேயே போர் முழக்கம் என்ற தலையங்கத்தை எழுதத் தொடங்கி யிருக்கிறார்.

'திரு. ராமசாமி அவர்கள் தர்மபுரி ஜில்லா போர்டு காங்கிரஸ்கட்சிக் காரியதரிசியும், ஒரு பாரிஸ்டருமாவார்' என்பதற்காக யாரும் மிரண்டுவிடவேண்டாம். காரியதரிசியென்றால் அக்னி ஸ்நானம்செய்து மாறாத பரிசுத்தமுடைமையைப் பூண்டவரென்பது பொருளல்ல. ஒருவர் காரியதரிசியாக விருந்துகொண்டே வழுகிப்போகலாம்; அல்லது சூழ்ச்சி செய்யலாம். ஹிட்லர் ஆஸ்திரியாவிலிருந்த உபேதவாதக் கட்சியின் காரியதரிசியாவார். முஸோலினி இத்தாலியப் பொதுவுடைமைக் கட்சியின் தலைவராவார். அவ்விருவரும் எப்படித் திரும்பிப் போய்விட்டார்கள் பாருங்கள். இருவருக்கும் முறையே ஒரு ஜெர்மன் தனவந்தரும், பிரஞ்சு சர்க்காரும் பண உதவி செய்யவே திடீரென மாறி பாஸிஸப் பேய்களானார்கள். இதுபோல் ஒரு கொள்கையில் பற்றுடையவர் போலிருந்த எத்தனையோ பேர்வழிகள் அதற்கு எதிராகப் புரண்டிருப்பதுண்டு. அத்தகையோரை புறம்போக்குகளாகக் கருதித் தள்ளிவிட வேண்டுமே தவிர பெரிய 'அதாரடி'களாகக் கருதிவிடலாகாது. சில நாட்களுக்கு முன் பண்டித ஜவஹர் "காந்திஜீ தப்பிதம் செய்தாலும் கூட அவர் மீது நடவடிக்கை எடுத்துக் கொள்வேன்" என்று சொன்ன சொல்லின் அந்தரங்கத்தை யோசித்துப் பாருங்கள்.

திரு. ராமசாமிப் பாரிஸ்டரவர்கள் ஏதோ தமக்கேற்பட்ட எந்த புத்தி மாறாட்டத்தாலோ? இம்மை மாதி காங்கிரஸ் மந்திரிசபையைப்பற்றி தாறுமாறாக எழுதியிருக்கிறார். அது அவரைப்பெற்ற தந்தையாருக்குக் கூட பிடிக்கவில்லையாம், ஆகவே

அவர் (திரு. ராமசாமியாரின் தந்தையார்) தம் வருத்தத்தைத் தெரிவிக்கும் கடிதமொன்றை ராஜாஜிக்கு அனுப்பி யிருக்கிறார்.

* * *

பாரிஸ்டர் ராமசாமி அவர்கள் பிராமணர் அல்லாதாரியக்கத்தைப் பற்றி தவறான கருத்துக் கொண்டிருப்பதாகத் தெரிகிறது. தமிழ் நாட்டில் பிராமணர்களின் அழுத்தம் ஒரு அளவுக்கு இருந்து கொண்டிருப்பது உண்மையே யானுலும் தேசிய விடுதலையென்கின்ற யுத்த முழக்கத்தினிடையே அதனை (பிராமணர் அழுத்தத்தை) யொரு பிரமாத விஷயமாகத் தலையில் வைத்துக் கொண்டு ஆடவேண்டியதில்லை. பெண்களை ஆடவர்கள் அழுத்தும் கொடுமை, தொழிலாளிகளை முதலாளிகள் அழுத்தும் கொடுமை, தாழ்ந்த ஜாதியரை உயர்ந்த ஜாதியார் அழுத்தும் கொடுமை என்பவைகளெல்லாம் எவ்வாறு தேச விடுதலைப் போராட்டத்திலிழுத்துப் போடப்பட்டு, சுயேச்சைக்கு முட்டுக்கட்டையாகும்படி விடப்படலாகாதோ அவ்வாறே பிராமணர்-அல்லாதார் பிரசினையும் தேசத்தின் லக்ஷியத்தில் புகுத்தப்பட முடியாது.

பிராமணர் அல்லாதார் என்ற பிரச்னை முற்றிலும் இரு ஜாதியார்களுக்குள் ஏற்படும் போராட்டமல்ல. அது, ஜாதிப் பெருமைபேசி, வைதீக வெறி பிடித்து, தம்மைவிடப் பெரியோரில்லையென அகந்தை பேசி, மத அநாகரிகத்தைப் பரப்பி வயிறு பிழைக்கும் ஒரு பிராமணீய வகுப்புக்கும் அதனுல் அழுத்தப்படும் ஒரு வகுப்புக்கும் ஏற்படும் போர் முழக்கே யாகும். இதுபற்றி இங்கு அதிகமாக விவரிக்கவேண்டாம்.

பாரிஸ்டர் ராமசாமி அவர்கள் எழுதியுள்ள கட்டுரையைச் சற்று ஆராய்ந்து பார்ப்போம்:—

முதற்கண் அவர் (உண்மையான காங்கிரஸ் வாதியாகவே இருப்பாராலுல்) தம் சொந்தக்காரர் யாருக்கோ, அல்லது தம் நண்பர்களாகிய எவருக்கோ மந்திரி பதவி கிடைக்கவல்லை என்று வருந்தி பிரஸ்தாபக் கட்டுரையை எழுதியிருப்பதாகத் தெரிகிறது. ஆதலால் மனமாரவோ அல்லாமலே ஏதேதோ எழுதுகிறார். ஓரிடத்தில்,

> "காங்கிரசில் உள்ள பார்ப்பனரல்லாதார் தற்காலத்திய பார்ப்பனப் பிரதம மந்திரியாகிய தோழர் ராஜகோபாலாச்சாரியாரை எப்படியாவது உடனே ஒழித்துவிட்டு ஒரு பார்ப்பனரல்லாத தலைவரைக் கொண்டு வரவேண்டுமென்று சமயம் பார்த்துக் கொண்டிருக்கிறார்கள்."

என்று எழுதிவிட்டு மற்றோரிடத்தில், 15-7-37-ந் தேதி நடந்த கட்சிக் கூட்டத்தில் ஆச்சாரியார் ராஜினாமாச் செய்துவிடுவதாக பயமுறுத்தியதன் மேல் பிராமணரல்லாதார் அவரை விட்டுவிட்டார்கள் என்றும் தேசநலத்தையும் காங்கிரஸ் பெருமையையும் முன் நிறுத்திப் பார்த்தால் ஆச்சாரியாரை நீங்கவிடுவது நலமாயிராது என்றும் எழுதுகிறார். இரண்டு கூற்றும் முன்னுக்குப்பின் முரணாயிருப்பதைப் பார்க்க! இவ்வாறு அவர் கட்டுரை முழுதும் முன்னுக்குப் பின் முரண் நிரம்பியிருக்கிறது. உண்மையில் தமிழ்நாட்டில் ராஜகோபாலாச்சாரியாருக்கு எதிராக காங்கிரஸ்காரர்களின் இயக்க மெதுவுமில்லை. சுயமரியாதைப் பத்திரிகை, ஜஸ்டிஸ் பத்திரிகை என்பன மட்டிலும் தம் வழக்கத்தை விடாது ஏதேதோ வாயில் வந்ததைப் பிதற்றுகின்றன. சின்னுளைக்கு முன்,

> வெட்கமில்லையா?
> வீரமில்லையா?
> ஐயோ!
> பார்ப்பன ராஜ்யம்
> வந்துவிட்டதே
> தமிழா-உன் கதியென்ன?

என்ற சுவரொட்டியொன்று ஒருநாளிரவில், எவருக்கும் தெரியாது, சென்னை முழுதும் ஒட்டப்பட்டது. அந்நோட்டீஸின் காரணகர்த்தர்கள் உடைந்துபோன ஜஸ்டிஸ் ஓட்டைக் கப்பல் வீரர்கள்தான் என்று சொல்லப்பட்டது.

அந்த நோட்டீசினுல் யாரும் எந்த விதமான பரப்பரபும் கொண்டுவிடவில்லை. சில நாள் சுவரிலேயே இருந்துவிட்டு, அப்பால் மழையிலும் வெயிலிலும் நனைந்து எரிந்து மண்ணுய்ப் போயிற்று.

இவ்வாறு வகுப்புவாதிகளும், குழப்பக்காரர்களும், காங்கிரஸ் விரோதிகளுமாகிய சிலர் ஏதாவது குந்தகம் செய்து கொண்டே இருக்கிறார்கள். இதற்காக அறிவுடையோர் வருத்தம் கொண்டு விடுவதற்கில்லை. நாட்டின் அடிமை நிலைமைக்கு மேற்படிப் பேர் வழிகள் அறிகுறி என்றே நினைக்கவேண்டும்.

சென்னை மந்திரி சபை அக்ரகாரமோ, பிராமண விடுதியோ, பிராமண ராஜ்யமோ அல்ல. காங்கிரசின் பிரதிநிதியேயாகும். அதற்கு ஜாதிப்பற்றைக் காண்பிக்கவேண்டிய வேலை கிடையாது; காண்பிக்க வழியும் கிடையாது. தேசத்தைப் பக்குவம்செய்து சுயராஜ்யத்திற்கு ஜனங்களைத் தயார் செய்வதே அதன் வேலை. இவ்வேலை ஒழுங்காக நடைபெறுகிறதாவென்று பார்த்துக் கொள்ள பார்லிமெண்டரி போர்டு இருக்கிறது. அது தவறினுல் சகல வல்லமையுள்ள அகில இந்திய காங்கிரஸ் கமிட்டியிருக்கிறது. மந்திரிகள் ஏதேனும் தவறு செய்துவிட்டால் அ. இ. கா. கமிட்டியால் தாடியைப் பிடித்து அசைத்துவிட முடியும். அதற்கு மேலாக பண்டித ஜவஹர் இருக்கிறார். அதற்கும் மேலாக மகாத்மா காந்தி அடிகள் இருக்கிறார். இத்தனை படிகளையும் கடந்து பிராமணர் ஏதோ பிராமணரல்லாதாருக்கு வஞ்சகம் செய்துவிடுவார்கள் என்பது மௌடீகமல்லவா? ஒருகால் குந்தகம் செய்வார்களானுல் நூற்றுக்கணக்கான பிராமணரல்லாதார் காங்கிரசில் இருந்து என்ன பயன்? பிராமணர்கள் பிராமணரல்லாதாருக்கு இடுக்கண் செய்யாமல் பார்த்துக்கொள்ள வேண்டுமானுல், பிராமணரல்லாதார் மந்திரிகளாகத்தானு இருக்கவேண்டும்? காங்கிரசில் இடம் பெற்றிருந்தால் போதாதா?

மந்திரி பதவியில் பிராமணர்கள் பெருகிவிட்டார்கள் என்று சொல்ல

(27-ம் பக்கம் பார்க்க)



# "கனிந்த காதலர்"

(வித்வான் மா. இராசமாணிக்கம் P. O. L.)

"என்னருந் துணைவி யாவள்
எழிலுறும் இவள்தன் ஞேடும்
மூன்றுநா ளாக இங்ஙன்
முற்றிய காத லாலே
துன்பத்துக் கேது வாகித்
துடித்துமே ஈண்டு வந்தேன்;
இன்னவள் தந்தை இன்னே
இங்குவந் திடுவன் கண்டாய்! (1)

"நன்மன முடையோய்! யாங்கள்
நுகர்ந்திலம் அடிசில்; மேலும்
இன்னலால் இடருற் றந்தோ!
இழந்தனம் துயில்கை தானும்;
அன்னவன் என்னைக் காணின்
அக்கணம் ஒழிந்தேன் யானும்;
பொன்னெனப் பொலியு மீராள்
புலம்பியு ருயிரை நீப்பள் (2)

ஆதலால் எங்கள் பால்நீ
ஆன்றபேர் இரக்கங் கொண்டு
மேதகு மனத்தாய்! இன்னே
படகினை ஓட்டு ஓட்டு;
மோதுறு அலைக ளாலே
மாள்வது நன்றோ? தந்தை
காதுதல் தவிர்கை நன்றோ?
கலத்தினை விடுவாய் இன்னே" (3)

என்றஅவ் விளவல் கூற்றை
ஏற்றதும், கிளிசொல் பெற்றாள்
தன்னரு முகத்தை நோக்கித்
தளர்ந்தனன் உள்ளம் ஓட்டி;
"நன்மன முடையீர்! ஏரி
தன்னிலே இழந்தும், இந்த
இன்மொழி நங்கைக் காக
ஓட்டுவன் படகை" என்றான். (4)

பாரிருள் பரந்த தெங்கும்;
பறந்தது ஊழிக் காற்று;
ஏரியும் கொந்த ளித்தே
எறியலை களுமி குந்த;
நாரியும் நம்பி யோடு
நகர்ந்தனள் ஓடந் தன்னில்;
ஏரியும் அலைக ளாலே
எதிர்கொண்ட தன்னோர் தம்மை (5)

'துன்பத்தைக் கடந்தோம்' என்று
துளங்கினர் காதல் கூட்ட
அன்பொத்த இனியர்; அந்தோ!
அக்கணம் அலையொன் றோங்கித்
துன்பத்தை முடிப்பதே போல்
கவிழ்த்ததவ் வோடந் தன்னை;
அன்புடைத் தந்தை வந்தான்
அக்கணம் கரையில் நின்றான். (6)

தானருந் தவம்செய் தீன்ற
தனிமகள், கணவ னோடு
கோனுடன் கைகோத் தந்தக்
கொந்தளிப் புடைய நீரில்
'தோன்றுதல்-மூழ்கல்' கண்டான்;
துடித்துடன் அரற்றிக் கூவி
"என்னதான் செய்தேன்! அந்தோ!
என்மகள் இறக்கின் றாளே! (7)

"பொன்னெனப் போற்றிக் காத்த
புனிதையின் காதல் போற்றா
வன்மனப் பாவி யானேன்;
வனிதையின் வாழ்வ ழித்தேன்;
நன்மனத் துடனே உன்றன்
நறுமண முடித்தி ருப்பின்
என்னரு மகளே! உன்றன்
எழில்நலம் கண்டி ருப்பேன். (8)

"மகளது மனத்துக் கேற்ற
மணவனைச் சேர வொட்டாத்
தகவறு செயல்மேற் கொண்டேன்;
தனயையைத் தோற்றேன் அந்தோ!
இகமவள் இன்பொ ழித்தேன்;
இன்னல்யான் பூண்டேன் அந்தோ!
தகவுடைக் காத லார்தம்
தன்மதிப் புணர்ந்தேன் இன்றே" (9)

என்றுமே ஏங்கி ஏங்கி
எழில்மயில் தந்தை அங்கே
நின்றுமே அழுத ரற்றி
நெடும்பொழு திருந்த னன்றான்
நன்மன முடையோர் காதல்
நனிசிறப் புற்ற தென்னும்
பொன்னிகர் உண்மை நன்குப்
பெறப்படு கின்ற தன்றோ! (10)

4

# ஆரம்ப ஆசிரியர்களும் கிராமப் புனருத்தாரணமும்

(திரு. D. கிருஷ்ணசாமி)

நாட்டிற்கு நல்ல காலம் பிறந்துள்ளதை யாரும் மறுப்பதற்கில்லை! பாட்டாளியின் இரத்தமே உலகப் பொற்புதையல் என்பதை எல்லோரும் உணர்ந்து கொண்டுவிட்டனர். "சோம்பிக் கிடப்பவருக்கு சுகமில்லை" என்பது வருங்கால மக்களின் பஞ்சாட்சர மந்திரமாக இருக்கும். இவ்வளவிற்கும் காரணம் நம் நாட்டில் அரசியல் ஞானம் வேகமாக வளருவதேயாகும்.

சென்ற பிப்ரவரியில் தேர்தல் ஒலி கடலொலியென ஒலித்தது! காடு மேடெல்லாம் கார்கள் பறந்து சென்றன. இந்தியாவெங்கும் ஒரே அமளியாயிருந்தது. இந்தியாவின் பரிபூரண பிரதிநிதித்துவம் வாய்ந்தது, ஏழை எளியவர்களுக்கெல்லாம் ஈடில்லா உதவி செய்ய எதிர்கால சௌகர்யங்களை எதிர்பார்த்து நிற்பதுமாகிய ஸ்தாபனமான "காங்கிரசை" எதிர்த்துப் பல கட்சிகள் பல விதங்களில் போராடின. ஆயினும் என்ன! காங்கிரஸே பெருமிதமாக ஆறு மாகாணங்களில் வெற்றியடைந்தது. ஆனால் மறுபடியும் காங்கிரசை கலி சூழ நினைத்தது போலும்! மாதங்கள் மூன்றும் மகிழ்ச்சியின்றி கழிந்தன.

உண்மையிலேயே நல்ல காலம் பனியைக் கிழிந்தெழும் பரிதிபோல் உதயமாகியது. மந்திரி சபையைக் காங்கிரஸ் காரர்கள் கைப்பற்றினர். நாட்டின் வறுமையைப் போக்கி ஏழைகள் ஈடேறுவதற்கான வழியாதென ஆராய்வதிலேயே தங்கள் புனிதமான காலங்களைக் கழிக்கின்றனர் தலைவர்கள். அதற்கு என்ன செய்யவேண்டும்? நாட்டிற்கு உயிர் நாடியாய் இருப்பவை இந்தியக் கிராமங்களேயன்றோ! அங்குதான் அவர்களின் பரந்த எண்ணங்களும் பாய்ந்து சென்றன. "கிராமங்களைப் புனருத்தாரணம்" செய்வதே தற்போது அவசியமாகச் செய்யவேண்டிய முதல் வேலை! ஆம், இதில் தவறில்லை. அவசியம் செய்தே தீரவேண்டியதுதான். நமது பொக்கைவாய்க் கிழவரும், வாலிபச் சிங்கமும் அபிப்பிராய பேதமின்றி இதைத்தான் முடிவாகத் தீர்மானித்தார்கள். இனி கிராமப் புனருத்தாரண வேலை யாரம்பமாக வேண்டுவதே.

ஆசிரியத் தோழர்களே! நாட்டிற்கு நலம் செய்வார் நம்மிலும் வேறு யார் உளர்? ஆரம்ப ஆசிரியர்களின் கையில்தான் வருங்கால க்ஷேமம் சிக்கியிருக்கிறதென்றால் அது மிகையாகாது. இதை யாரும் மறுக்கவும் மாட்டார். "கிராமப்புனருத்தாரணத்தில்— அதாவது கிராம சீர்திருத்தத்தில் ஆரம்ப ஏழை ஆசிரியர்கள் என்ன செய்யக்கூடும்?" என்று நீங்கள் விழிக்கிறீர்கள். உண்மையில் உங்களால் ஆகவேண்டிய காரியங்கள் அநேகமிருக்கின்றன. அவைகளில் சிலவற்றை கீழே குறிப்பிடுவோம்.

கிராம ஜனங்களோடு மிகவும் நெருங்கிய தொடர்புடைய சமூகம் ஆசிரியர் சமூகமேயாகும். ஆகவே அறியாமை நிறைந்துள்ள கிராம ஜனங்களுக்குப் பல வழிகளில் அறிவை ஊட்டக்கூடிய சந்தர்ப்பமும் சௌகரியமும் ஆசிரியர்களாகிய உங்களுக்கே இருக்கின்றன. உலகில் ஒரு நாடு விடுதலை அடைய வேண்டுமானால் அரசியலை ஏற்று நடத்தும் சக்தியை அடைய வேண்டுமானால், அதன் கல்வி நிலை சீர்திருந்த வேண்டியது மிகவும் அவசியம். ஆகையால் நீங்கள் கிராமங்களில் கல்வியைப் பரப்புவதில் உங்கள் முழுச் சக்தியையும் பிரயோகிக்க வேண்டும். பல வழிகளைக் கடைப்பிடிக்க வேண்டும். மாணவர்களுக்கேயன்றி வயது வந்த வாலிபர்களுக்கும் உங்கள் பெருஞ் சிரமத்தைப் பாராட்டாமல் இரவு பகலாக உழைத்துக் கல்வி புகட்ட முயலவேண்டும். இந்த முயற்சியில் ஏற்படும் பல எதிர்ப்புகளையும் ஆண்மையோடு எதிர்த்து வெற்றியடைபவரே உயர்ந்த ஆசிரியராவர்!

அடுத்தபடியாக ஆசிரியர்கள் சுகாதார விஷயங்களில் அதிகமான பங்கெடுத்துக் கொள்ள வேண்டும். தொத்து நோய்கள் உண்டாகும் காரணங்களையும் அவைகளைப் போக்க மக்கள் எடுத்துக் கொள்ள வேண்டிய முயற்சிகளையும் சுகவழிகளையும் பற்றியும் கிராமங்களில் விசேஷ தினங்களில் ஜனங்கள் திரளாகக் கூடும் சமயங்களில் பிரசாரம் செய்யவேண்டும். பிரசங்கங்கள் மூலமும் சுகாதார இலாகாவினரால் வழங்கப்படும் துண்டுப் பிரசுரங்களின் மூலமும், ஷை இலாகாவின் உதவியைக் கொண்டு விளக்குப் படக்காட்சி (Magic Lantern) காட்டச்செய்வதின் மூலமும் இந்தத் தொண்டை செய்யலாம்.

உலகில் விஞ்ஞானக்கலை எவ்வளவு வேகமாகப் பரவுகிறதென்ற விஷயம் நம் நாட்டு கிராம ஜனங்களுக்குத் தெரிவதில்லை. அவர்கள் இன்னும் பழமை விரும்பிகளாகவே இருக்கின்றனர். விஞ்ஞான அறிவு அவர்களுக்குக் கொஞ்சமும் இல்லாமையினாலேயே அவர்கள் பல தவறுகளுக்கிலக்காகிறார்கள். ஆசிரியர்கள் வேடிக்கையாகவும் சுவாரஸ்யமாகவும் அவர்களுக்குப் பல விஷயங்களைப் போதித்து விடலாம்.

உலகில் விஞ்ஞான விசைகளைக் கொண்டு எத்தகைய கொடூரமான யுத்தங்கள் நடத்தப் பெறுகின்றனவென்பதையும், கோடையிடியையும் பின்னடையச் செய்யக் கூடிய பயங்கர குண்டுகளை வீசி எப்படிப் பெரும் பெரும் நகரங்கள் அழிக்கப்படுகின்றனவென்பதையும் விஷவாயுக்கள் ஆயிரக் கணக்கான மனிதர்களை எப்படி க்ஷண நேரத்தில் கூன் குருடு செவிடாக்கி விடுகின்றனவென்பதையும், இமைக்கும் நேரத்தில் எவ்வாறு விஷ ஒளிகள் மக்களை பதினாயிரக்கணக்கில் கொலை செய்கின்றனவென்பதையும் அவர்களுக்கு எடுத்துக் கூறினால் உண்மையில் பிறநாட்டிற்கு யுத்தகாலங்களில் நம்நாட்டு மக்களை யுத்த அரங்கத்திற்கு அனுப்பும் மனப்பான்மையையும், யுத்தம் செய்யவேண்டும் என்ற மனப்பான்மையையும் அவர்கள் அடியோடு விட்டுவிடக்கூடும்.

கடைசியாக ஆசிரியர்கள் அரசியல் விவகாரங்களில், அடிக்கடி ஏற்படும் மாறுதல்களையும்பற்றி அப்போதைக்கப்போது ஜனங்களுக்கு எடுத்துரைக்கவேண்டும். இது மிகவும் முக்கியமான விஷயம். ஜனங்களுக்கு அரசியல் ஞானம் எவ்வளவுக் கெவ்வளவு அதிகப்படுகின்றதோ அவ்வளவுக் கவ்வளவு நல்ல பலம் ஏற்படும். ஆகவே ஆசிரியர்கள் இந்தத் துறையிலும் மேலே குறிப்பட்ட இதர துறைகளிலும் புனருத்தாரண வேலைகள் செய்வார்களாக.



---

## இந்திய இளைஞர் சங்கம் தேவகோட்டை

2-8-37-ந் தேதி P. R. M. லெட்சுமணன் செட்டியார் அவர்கள் தலைமையில் ஓர் விவாத சபை நடைபெற்றது. அவ்வமயம் ஸ்ரீமான்கள் S. நாகநாதன் S. M. C. T. நாதன், S. T. திருநாவுக்கரசு ஆச்சாரி முதலானவர்கள் செல்வம்தான் சிறந்ததென்றும் K. R. S. முத்து, S. ராஜகோபால், V. தர்மராஜன் முதலானவர்கள் கல்விதான் சிறந்ததென்றும் விவாதித்தபின் தலைவர் அவர்கள் கல்விதான் சிறந்ததென்று முடிவு கூறியபின்பு காரியதரிசியால் வந்தனோபசாரம் கூறக் கூட்டம் முடிவுற்றது எனக் காரியதரிசி எழுதுகிறார்.

---

## இராயவரம் விவேகானந்த வாசகசாலையின் முதலாவது ஆண்டு விழா

மேற்படி விழா 22-8-37 ஞாயிறன்று காலை மாலை இருவேளைகளிலும் அவ்வூர் "நீலாஞ்சனா டாக்கீஸ்" சினிமா தியேட்டரில் புதுக்கோட்டை மகாராஜா கல்லூரி தமிழாசிரியர் உயர்திரு. P. மீனாட்சி சுந்தரம் நாயுடு M. A. அவர்கள் தலைமையில் நடைபெறும்.

# மலாயாவில் இந்தியத் தொழிலாளர்கள்

'குள்ளநரி'

மலாயாவில் வியாபார மந்தமேற்பட்டதும் அங்கிருந்த இந்தியக் கூலிகள் தாய்நாட்டிற்குத் துரத்தப்பட்டார்கள். இப்போது விலைவாசி சற்று உயர்ந்திருப்பதால், மீண்டும் அழைக்கப்படுகிறார்கள். இந்த நிலைமைக்கு வருந்தியும், பொதுவாக மலாயாத் தொழிலாளிகள் நிலைக்கு இரங்கியும் 'குள்ளநரி' என்று கையொப்பமிட்டிருக்கும் அன்பர் அடியில் வரும் கட்டுரையை எழுதுகிறார். அவர் திரு. வில்சனின் அறிக்கையை விரிவாக அலசிப் பார்க்கிறார். பண்டித ஜவஹர் கூறியவாறு, சீனத் தொழிலாளர் சம்பளம் உயர்ந்திருக்க, இந்தியத் தொழிலாளர்க்கு தாழ்ந்த 'கூலி' கொடுப்பதும், அது மாறாமல் அப்படியே இருப்பதும் வருந்தத்தகுந்தது.

விலைவாசிகள் சிறிது உயர்ந்துவிட்டது. ரப்பர் விலை முக்கியமாக ஏறியிருக்கிறது. அதன் பயனாக இந்தியத் தொழிலாளர்கள் (தென்னிந்தியாவிலிருந்து) ஆயிரக்கணக்காக வாரா வாரம் வந்து குவிகிறார்கள். சின்னாளைக்குமுன் வியாபார மந்தமேற்பட்டபோது அத்தனை பேரும் மலாயாவிலிருந்து இந்தியா அனுப்பப்பட்டார்கள். அந்நாள் "ஐயோ! என் செய்வது? ஆயுள் முழுதும் காட்டை, புலி முதலிய கொடிய மிருகங்களுக்கும், சகிக்கவொண்ணா வெப்பத்திற்கும் நடுவில், வெட்டிப் பயிர் செய்து செல்வத்தைக் கொழிக்க வைத்தோம். இப்பொழுது விலைவாசிகள் இறங்கவும், அடித்து விரட்டுகிறார்கள். எங்கு போவது? தாய்நாடு சென்றுதான் என் செய்வது? எங்களைப் பாதுகாப்பாரில்லையா?" என்று ஆகாயத்தை நோக்கிப் புலம்பிக் கொண்டு, வாடிய முகத்துடன், நிர்க்கதியாகக் கூட்டம் கூட்டமாக இந்தியா சென்றனர். இப்பொழுதோ மறுபடியும் வரவழைக்கப்படுகிறார்கள். இன்னுமொரு வியாபார மந்தம் ஏற்பட்டால்?........

மனிதாபிமானி ஆப்ரகாம் லிங்கன் அடிமைகளுக்காக உழைத்து வெற்றிக் கொடியை ஏற்றினார். நம் தமிழ்த் தொழிலாளர்கள் நிலைமையோ, நீக்கிரோக்களின் நிலைமையைவிடக் கேவலமாக இருக்கிறது. சமீபத்தில் காலரா கண்டு சிலர் அதற்குப் பலியாயினர். ஆடுமாடுகளைச் சிறு கூட்டிற்குள் அடைப்பதுபோல் கப்பல்களில் போதிய வசதிகளளிக்கப்படாமல் எல்லாவித நோய்களுக்கும் ஆளாகிறார்கள்.

### லேபர் அறிக்கை

திரு. வில்சன் அவர்களது சென்ற ஆண்டு அறிக்கை வெளிவந்துவிட்டது. விஞ்ஞானிகள் பற்பல புதுமைகளைக் கண்டுபிடிக்கிறார்கள். தோழர் வில்ஸன் என்ன அவர்களுக்குக் கீழ்ப்பட்டவரா?

இந்தியத் தொழிலாளர்கள் தீண்டாமையை மலாயாவிற்கும் மூட்டை கட்டிக்கொண்டு வருகிறார்களாம். அதை அகற்ற ஓர் புது முறையைக் கண்டுபிடித்திருக்கிறார் திரு. வில்சன்.

என்ன தெரியுமா? தோட்டங்களில் குழாய் (பைப்) [illegible] தீண்டாமையை ஒழிக்க ஓர் [illegible] டாம். இனி—தீண்டாமை விரட்டப்படுகிறதாம்!

இனிமேல் இந்தியர்களே! ஹரிஜன சேவா சங்கம் முதலிய பல மன்றங்களை உடனே மூடிவிட்டு எல்லாக் கிராமங்களிலும், குழாயில்லாத நகரங்களிலும் தண்ணீர் பைப்பை நிறுவ உழையுங்கள். உடனே தீண்டாமை ஓடியே போய்விடும். ஆனால் ஒன்றுமட்டும் கவனிக்கவேண்டும். ஆணி முதற்கொண்டு பிரிட்டனில் செய்யப்பட்டதாக இருக்கவேண்டும். அப்பொழுதுதான் அதற்கு மகிமை கூடும்.

### இந்தியா கூலிக் கிடங்கு

பொதுவாக இங்கு தொழிலாளர்களே அதிகமாக உள்ளமையாலும், பெரும்பான்மையோர் கல்வியறிவற்றவராக இருப்பதாலும், இந்தியர்கள் எல்லாம் "ஒரு பானைச் சோற்றுக்கு ஒரு சோறு பதம் பார்த்தால் போதும்" என்ற பழமொழியைப் பின்பற்றி, கூலிக் கிடங்கு என்ற மனப்பான்மையை பசுமரத்தாணி போல் பதிய வைத்துக்கொண்டிருக்கிறார்கள். இந்தியனென்றால் யாவரிடமும் கூலியென்ற அபிப்பிராயம் நிலவுகிறது.

### தருமமா?

கோவில் கட்டினால்,—சத்திரஞ் சாவடி, தருமப் பள்ளிக்கூடம், வைத்தியசாலை முதலியன தருமத்திற்குக் கட்டினால்—பிரமாதமாகப் புகழ்ந்து கொள்வார்கள்; புகழப்படுவார்கள். இங்கு தொழிலாளர்களுக்கு அநேக வசதிகள் செய்து கொடுத்திருக்கிறார்களாம்! சம்பளமும் இந்தியாவில் கொடுப்பதைவிட அதிகமாக அளிக்கப்படுகிறதாம்! இந்தியாவில் பட்டினி கிடந்து வாடுகிறார்களாம். இங்கு ராஜபோகத்தில் நடத்தப்படுகிறார்களாம்! எத்துணை தூரம் அவர்களுக்கு வசதியளிக்கப்படுகிறது என்பது வேறு பிரச்னை. ஆனால் சம்பளம் கொடுப்பதும், இந்தியாவிலிருந்து சிலரை இலவசமாகக் கப்பலில் அழைத்து வருவதும் சும்மாவா? தருமமா? நெற்றி வியர்வை நிலத்தில் ஆறாகப் பெருக உழைக்கிறான் இந்தியன். அவனது உழைப்பின் பயனாகக் கிடைக்கும் வருவாயில் சிறிது உழைப்புக்கு அளிக்கப்படுகிறது. எஞ்சியது லண்டன் நகரம் போகிறது. இதில் பெருமை யடித்துக் கொள்ள என்ன இருக்கிறது? மற்றும் இந்தியாவில் இவர்களது நிலைமை மிக மோசகரமானதாம்! இங்கோ? பன்மடங்கு நல்ல நிலைமையிலிருக்கிறார்களாம்! எதற்காக ஆயிரக்கணக்கான மைல்களுக்கப்பால் சொந்த நாட்டையும் உற்றார் உறவினரையும் விட்டு வருவது? இந்தக் குருட்டு முதலாளிகளுக்கு ஏன் உதாரணம் இந்தியா மாத்திரம் கிடைக்கிறது? ஏன் ரஷ்யத் தொழிலாளரோடு ஒப்பிடக் கூடாது? ஏன் பிரிட்டிஷ், அமெரிக்கத் தொழிலாளர் நிலைமையோடு ஒப்பிட்டுப் பார்க்கக்கூடாது? இந்தியரால் நல்ல வருவாய் கிட்டும்பொழுது ஏன் இன்னும் நல்ல முறையில் நடத்தக்கூடாது?

### ஊருக்கிளைத்தவன் இந்தியனா?

சமீபத்தில் திரு. சாஸ்திரியார் கோஷ்டி வந்தது. 'வெடிய, வெடிய' பரிசிலனை செய்து முன்பே 45 காசு கொடுத்து வந்ததை 50 காசாக்கும் படிக் காருண்ய உள்ளத்திலிருந்து வெளி வந்தது. சாஸ்திரியார், அந்த 50 காசு மனிதத் தன்மையோடு ஒருவன் வாழ்க்கை நடத்தப்போதுமா, தோட்ட முதலாளிகளுக்கு வருவாய் எத்தனை கோடி வருகிறது, அதில் எத்தனை சதாம்சம் கொடுக்கலாம் என்பதைப் புள்ளி விபரங்களோடு பார்த்துக் கூறினாரா என்பதுபோன்ற வினாக்களுக்குப் பதில் வாசகர்களே ஊகித்தறியலாம். சமீபத்தில் தோழர் ஜவகர் "50 காசு ஏன் ஒரு வரையறையாக இருக்கிறது? ஏன் அதிகம் கொடுக்கக் கூடாது?" என்று கூறினார். இதற்கு "பொதுவுடைமைக் கொள்ளைக்காரன்" என்ற பெயரை ஆங்கிலப் பத்திரிகைகள் சூட்டின. வாயாரா சாஸ்திரியாரை வாழ்த்திற்று.

"நல்லவன் இந்தக் காலத்தில் பிழைக்க முடியாது" என்று சர்வ சாதாரணமாகக் கூறுவது வழக்கம். அதேபோல் எஜமானப் பிரியமும், சாத்விகத்தில் அளவு கடந்த நம்பிக்கையுங்கொண்ட இந்தியர்களை "ஓடுகிற மாட்டைத் துரத்துவது" போல் விரட்டுகிறார்கள். சமீபத்தில் சீனர்கள் வேலை நிறுத்தம் செய்தார்கள். சுயமரியாதையும், தியாக புத்தியும், தன்மதிப்புமுள்ள சீனத் தொழிலாளர்கள் மிரட்டல்களுக்குச் சிறிதும் அஞ்சாது ஒரே பிடியாக இருந்தனர். இறுதியில் 70 காசு கொடுக்கப்பட்டது. இவ் வித்தியாசமேன் என்றால்-பொருத்தமான பதில் கிடையாது. அடிமை இந்தியனை என்ன வேண்டுமானாலுஞ் செய்யலாமென்ற ஒரே தத்துவந்தான் காரணம்.

இந்தியர்கள் சீனர்களைப்போல் உழைப்பாளிகளல்லவென்று ஒருவருங்கூறத் துணிகிறார்களில்லை. இந்தியர்களையே விரும்புகிறார்கள். தகுதியற்றவர்களென்றால் ஏன் யாவரும் (தோட்ட முதலாளிகள்) இந்தியரையே வேலைக்கு வைத்துக்கொள்கிறார்கள்? இதிலிருந்து உண்மை விளங்குமன்றோ?

தோழர் ஜவகர் கூறியதுபோல் இந்தியாவின் விடுதலையையும், அதன் செல்வாக்கையும் பொறுத்திருக்கிறது வெளிநாட்டிலுள்ள இந்தியர் நிலைமையும்.

யாரிடம் இவைகளைக் கூறி அழுவது? யார் கவனிக்கப் போகிறார்கள்? ஆனால் உண்மையை மறைத்து முழுப் பூசணிக்காயைப் பழஞ்சோற்றில் மறைத்து வைப்பதைப் பார்த்துக்கொண்டு வாளாவிருக்க முடியவில்லை.

---



__நக்ஷத்திரம்__

ஆம். பெண்ணுலகு என்னும் ஆகாயத்தில் பிரகாசிக்கும் நக்ஷத்திரமே—இவர் பெயர் மிஸ். ரதன்பாய்.



யுவர் காட்சி

சென்ற வாரம் முதன் மந்திரி ராஜாஜி சென்னை ஒய். எம். ஸி. ஏ. கட்டிடத்தில் International Youth Exhibition என்னும் காட்சியைத் திறந்து வைத்தார்.

—I.P.P.S.



முஸ்லிம் மந்திரிக்கு மரியாதை

சென்னை முஸ்லிம் "கிரசெண்ட் சங்கத்தார்" மந்திரி கனம் யாகூப் ஹாசனுக்கு ஒரு விருந்து நடத்தினர்கள். கனம் யாகூப் ஹாசனுக்குப் பக்கத்தில் நிற்கும் மாது அவர் மனைவியார்.

—P.P.B.





வைசிராய் மகள்

மே. த. வைசிராய் லார்டு லின்லித்கோவின் புதல்வியாகிய மிஸ். லின்லித்கோ சென்ற வாரம் சென்னைக்கு விஜயம் செய்தார். இப்படம் செண்டிரல் ஸ்டேஷனில் எடுக்கப் பட்டது. நடுவில் நிற்பவர் மிஸ். லின்லித்கோ. —P.P.B.



பொல்லாத அர்ச்சகி

மதுரா பிலிம் அருணகிரிநாதரில் தோன்றும் கொடுமை மிக்க அர்ச்சகி. பிலிமில் கந்தசாமி மேற்படி அர்ச்சகியாக நடிக்கிறார்.



## பிராணி நூலறிஞர்

சென்னை கிருஸ்தவக் கல்லூரியில் பிராணி நூல் போதகாசிரியராகிய திரு. என். கேசவப் பணிக்கர் எம். ஏ., எம். எஸ்ஸி. சென்னை சர்வகலாசாலையாரால் 'டாக்டர் அப் சயன்ஸ்' என்னும் பட்டம் வழங்கப்பட்டார். திரு. பணிக்கர் பிராணி நூல் சம்பந்தமாகச் செய்த ஆராய்ச்சியே அப்பெயரை சம்பாதித்துக் கொடுத்தது.

—P.P.B.

## தொழில் மந்திரிக்கு உபசாரம்

சென்னை தொழில் மந்திரியாகிய கனம் வி. வி. கிரிக்கு பெரம்பூர் எம். எஸ். எர். ரயில்வே தொழிலாளிகள் ஒரு உபசாரப் பத்திரம் நக்கிறார்கள். கனம் கிரி மாலையுடன் நிற்பது காண்க.

—P.P.B.



# பாஸிஸத்தின் இயற்கை

(தோழர் எம். அழகப்பா)

மிதவாதம் (Liberal), பிற்போக்கு (Conservative), பொதுவுடைமை (Communist) முதலிய போக்குகள் ஒவ்வொன்றுக்கும் எப்படி சில கோட்பாடுகளும், தத்துவங்களும் இருக்கின்றனவோ, அதேபோல பாசிஸத்திற்கும் ஒரு தத்துவம் இருக்கின்றதென்று பலர் கருதுகின்றார்கள். உண்மையில் பாசிஸத்தின் தத்துவமெல்லாம் ஏழைகளை ஏமாற்றுவதும், நடைமுறையில் முதலாளித்வத்திற்கு ஒத்துப் பாடி, தொழிலாளர் புரட்சி என்னும் பெருகிவரும் வெள்ளத்தை பலாத்கார முறைகளால் தடுக்கும் சூழ்ச்சியுமாகும்.

அதன் அம்சங்கள் யாவும் பாமரர்களை மயக்கி, மிரட்டி ஏமாற்ற ஏற்பட்ட முறைகளேயாகும்.

ஆதியில் அது தோன்றியபோது அது எவ்வித தத்துவத்தையும் அடிப்படையாகக் கொண்டு தோன்றவில்லை. தொழிலாளர் புரட்சியை எவ்வாறாயினும் எதிர்க்கவேண்டுமென்ற கருத்திலேயே தோன்றியது. ஆகவே அதன் தத்துவம் ஒன்றை ஒழிக்க வேண்டுமென்ற தத்துவமே தவிர புதிதாக எதனையேனும் சிருஷ்டிக்கவேண்டுமென்பதல்ல.

முதலாளித்வத்தின் முறைகளுக்கும் பாசிஸத்தின் முறைகளுக்கும் எவ்வித வேற்றுமையுமிருப்பதாகத் தெரியவில்லை. பலாத்காரத்தைப் புகழ்வதும், வீறிட்ட தேசியப் பற்றை தூண்டுவதும், யுத்தமே மனித சமூகம் செய்யவேண்டிய மேலான பணியென்று போதிப்பதும், ஈவு, இரக்கம், தயவு, தாட்சண்யம் முதலிய தாராளச் சிந்தைகளையெல்லாம் அறவே ஒழிப்பதுமாகிய பாசிஸத்திற்கும் முதலாளித்வ முறைக்கும் என்ன வேற்றுமையிருக்கின்றது?

பாசிஸத்தின் முக்கிய கோட்பாடுகளெனக் கொள்ளவேண்டுமேயானால் பின் வருவனவற்றைத் தவிர வேறில்லை.

(1) தொழிலாளர் பகையை ஒழித்துப் புரட்சிப் போக்கை வேரறுத்து முதலாளித்வத்தை என்றென்றும் வாழியாக நிலைநிறுத்துவது.

(2) முதலாளித்வ சர்வாதிகாரத்தைப் பரப்புவது.

(3) தொழிலாளரின் வகுப்பு உணர்ச்சியை அடக்கி முதலாளித்வத்திற்கு ஏற்றதான ஒரு வகுப்பு ஒற்றுமையை உண்டுபண்ணுவது.

(4) பார்லிமெண்டரி ஜனநாயக முறையை மெல்ல மெல்ல ஒழித்துவிடுவது.

(5) கைத்தொழில் பொருளாதாரத் துறைகளில் அரசாங்கத் தனி உரிமையை நிலைநாட்டுவது.

(6) வெவ்வேறான ஏகாதிபத்திய மனப்போக்குடைய நாடுகளை ஒன்றுபடுத்தி பொருளாதாரத் துறைகளிலும் ஒருவித உறவை ஏற்படுத்துவது.

(7) ஏகாதிபத்திய நாடுகள் ஒன்றுக்கொன்று முரணிக்கொள்ளாமல் இருக்க யுத்தம் செய்து மற்ற நாடுகளைக் கைப்பற்றுவது.

மேற்கண்டவைகளைத் தவிர வேறு பாஸிஸத்தில் ஒரு கொள்கையும் இருப்பதாகக் கருத முடியாது.

உதாரணமாக ஸ்பெயினை எடுத்துக் கொள்ளுவோம். ஸ்பெயின் ஒரு விவசாய நாடு. அங்குள்ளவர்களில் சுமார் 60% விவசாயிகளாவார்கள். மீதமுள்ளவர்களில் பெரும்பான்மையோர் தொழிலாளிகள். அங்கு மகாயுத்தத்திற்குப் பிறகு ஏற்பட்ட அரசாங்கங்கள் ஒன்றன்பின் ஒன்றாக மாறி கடைசியில் தொழிலாளிகள் விவசாயிகளின் ஆதிக்கம் ஏற்படுவதற்கான வழியில் ஜனநாயக சர்க்கார் தலையெடுத்தது. இது பாசிஸ்டு நாடுகளாகிய இத்தாலி, ஜெர்மனிகட்குப் பிடிக்கவில்லை.

உள்நாட்டுக் கலகத்தை உண்டாக்கி தங்கள் ஆதிக்கத்திற்கு கொண்டுவர எண்ணங்கொண்டு ஜெனரல் பிராங்கோ மூலம் கலகத்தைக் கிளப்பிவிட்டு எதிர்க்கச்செய்து ஆயுதங்களும், படைகளும் இன்னும் யுத்தத்துக்குவேண்டிய சாதன திரவியமும் உதவிகளும் நேரிடையாகவும், மறைமுகமாகவும் அளிக்கத் தொடங்கி நீடித்து யுத்தத்தை நடத்திக்கொண்டு வருகிறது.

ஸ்பெயின் குடிமக்கள் அவர்கள் தேசத்திலுள்ள பிற்போக்காளர்களை மட்டுமல்லாது அவர்களை அடிமைப்படுத்த முனைந்துகொண்டிருக்கும் எதேச்சாதிகார அரசியல்களையும் எதிர்த்துப் போராடி வருகிறார்கள். முடிவில் பாஸிஸ்ட்டுகளின் ஆதிக்கத்தில் ஸ்பெயின் தேசம் வந்துவிடுமென்பதற்கான அறிகுறிகளும் இன்று நடைபெற்றுவரும் நடவடிக்கைகளிலிருந்தே தெரிந்துகொள்ளலாம்.

அவ்வாறு ஸ்பெயின் தேசம் பாஸிஸ்ட் சார்வதிகாரத்தின் கீழ் அகப்பட்டுக் கொள்ளுமேயானால் பக்கத்திலுள்ள பிரான்சுக்கும் இந்த வாடை வீசாமற்போகாது. பின் பிரான்சிலும் பாஸிஸத்தின் சேஷ்டை தலைவிரித்தாட ஆரம்பிக்கும். பாஸிஸத்தின் எதிர்ப்பு ஏற்படுமேயாகில் அது ஒரு உலக மகாயுத்தத்திற்கே கொண்டுவந்து விடுமென்பதில் என்ன சந்தேகம்?

---

## சீனமங்கலம் போர்ட்டு பாடசாலை மாணவர்கள் சங்கம்

30-7-37-ம் தேதி மாலை 4 மணிக்கு இச்சங்கத்தின் வாராந்திரக் கூட்டம் பனைக்கரை, ஏ. ராமநாதன் அவர்கள் தலைமையிற் கூடிற்று. மாணவர். மாணவிகளான, முனியய்யா, வெங்கிடாசலம், முத்துவயிறு, ரெத்தினம், மாணிக்கம், சுப. திருநாவுக்கரசு, கரு, சொ. ஜானகி, வெ. சோம. சொர்ணவல்லி இவர்களாலும், ஆசிரியர் எஸ். கிருஷ்ணய்யர் அவர்களாலும் சொற்பொழிவு நிகழ்த்தப்பட்டது.

# சினிமாக் குறிப்பு

## தமிழில் 'பூ கைலாஸ்'

சுந்தரம் சவுண்ட் ஸ்டுடியோக் காரர், கன்னடப் படமாகிய பூகைலாசத்தைத் தமிழில் தயாரிக்கப் போகிறார்கள். தமயந்தி சகோதரிகள் இதில் நடிக்கப் போகிறார்களாம்.

## தமிழில் 'சேவா ஸாதன்'

வங்காள நாவலாசிரியரான பிரேம் சந்தின் பிரசித்திபெற்ற 'சேவா ஸாதன்' எனும் நாவலைத் தமிழில் படமெடுத்துக் காட்டுவதற்குரிய உரிமையை சென்னை யுனைடெட் ஆர்டிஸ்ட் கம்பெனியார் பெற்றிருக்கிறார்கள். திருமதி எம். எஸ். சுப்புலட்சுமி இதில் பிரதமப் பெண் நடிகையாய்த் தோன்றுவார்.

## அருணகிரிநாதர்

சென்னை மயூரா பிலிம்ஸ் லிமிடெட்: இவர்களால் ஷாலினி ஸ்டுடியோவில் அருணகிரிநாதர் என்ற தென்னிந்தியத் திருத்தொண்டரின் வாழ்க்கை வரலாறு படமெடுக்கப்பட்டு வருகின்றது. திறமையான நிர்வாகப் பொறுப்பும், சிறந்த டைரக்ஷனும் இப்படத்திற்கு வாய்த்திருக்கின்றன. கொடிய பாவங்களைச் செய்த தொண்டர் ஒருவர் இடையறு பக்தி மேலீட்டால் திருமுருகன் அருள் பெற்றுப் புண்ணியாத்மாவாக மாறிய புராண வரலாற்றையே இப்படம் காட்டுகின்றது. வீண் ஆடம்பர குணமுடைய புரோகிதக் கொடுமைகளைத் தமது ஆழ்ந்த நிலைகலங்கா பக்தியினால் வென்று நற்கதியடைந்த காட்சியே இப்படத்தில் அமைக்கப்பட்டிருக்கிறது.

தேவாரம், திருப்புகழ் முதலான அருட்பாடல்களை இனிமையாகப் பாடி மகிழ்விப்பதில் பெயர்போன தேவாரம் வி. சங்கரலிங்கம் பிரதம பாகத்தை நடிப்பார். அவருடன் நாடகமேடை அனுபவம் வாய்ந்த சிறிய நடிகர்கள் நடிப்பார்கள்.

சமூகத்தொண்டில் பிரதம நடிகையாய் விளங்கிய ஸ்ரீமதி டி. என். மீனாட்சி அருணகிரியாரின் சகோதரியாக நடிப்பார். கவாய் எஸ். என். விஜயலக்ஷ்மி பக்தரின் தாயாராய் நடிப்பார். 'சிறுத்தொண்டனில்' நடித்த திருமதி ஸ்வர்ணம்பாள் தாசிகள் தலைவியாகத் தோன்றுவார். திருமதி எ. சுந்தரி இக்கதையின் பொல்லாத அர்ச்சகியாகத் தோன்றுவார்.

கொடுமைக்குணம் மிகுந்த பிரபுத்த தேவராயரின் ராஜகுருவாக நடிப்பவர் திரு. எஸ். டி. சந்திரன். இவர் தென்னிந்தியாவில் பெயர் போன ஓர் நடிகர்.

இப்படம் பூர்த்தி பெறும் நிலைமையிலிருக்கிறது. கதை ஒழுங்காய் அமைக்கப்பட்டிருக்கிறது. கதையில் உள்ளத்தை உருக்கும் அருக்காட்சிகள் நிறைந்திருக்கின்றன. காமிராக்காரரின் அற்புதமான வேலைகள் பார்ப்பவர்கட்கு தளராத உற்சாகத்தைக் கொடுக்கும்.

## திரைப்படங்களின் மூலம் காங்கிரஸ் பிரசாரம்

ஒரு நிருபர் காங்கிரஸ் வேலைகளையும், தலைவர்களின் பேச்சுகளையும், செயல்களையும் படித்தோர் பாமரர் ஆகிய அனைவர்க்குமிடையே நன்றாய் விளம்பரப்படுத்துவதற்காக திரைப்படங்களைப் பயன்படுத்த வேண்டுமெனக் காங்கிரஸ் சர்க்காருக்கு ஆலோசனை சொல்கிறார்.

ஆங்காங்கே நடைபெறும் பிரமாண்டமான காங்கிரஸ் கூட்டங்களின் காட்சி, பெரிய தலைவர்களின் தோற்றம், பேச்சு, ஆகியவைகளைத் திரைப்படங்களின் வாயிலாகப் பார்க்கும்போது உணர்சியற்றுக் கிடக்கும் கிராமங்களிலுள்ள மக்கள் மந்திரீக சக்தின் வயப்பட்டெழுவது போல் புத்துயிர் பெற்று விடுவார்கள் என்பது அவரது கருத்து. தலைவர்களின் சுற்றுப் பிராணத்திற்கும், தனி நபர்களின் பிரசாரத்திற்குமெனச் செலவழிப்பதைவிட மிகக் குறைவாகவே இதற்குச் செலவாகும். இதனால் சேமிக்கப்படும் பணத்தை வேறு வழிகளில் உபயோகப்படுத்தலாம்.

திரைப் படப் பிரசாரத்தினால் பொதுமக்கட்கும் காங்கிரசுக்குமுள்ள தொடர்பு பலப்பட்டுக் கொண்டே வரும்.



'ப்ரதிபா'வில் ஒரு காட்சி.



இந்தியப் படங்களின் முடிவில், பாரதத்தாயின் மகிமை சிறக்கும் வந்தேமாதர கீதத்தைப் பாடச் செய்யவேண்டும். அது பாடப்படும் போது பார்க்க வந்தவர்கள் இங்கிலீஷ் ராஜவாழ்த்துப் பாடுங்கால் செய்வதைப்போல், மிக அமைதியாக எழுந்து நிற்கவேண்டும்.

இவ்விஷயமாகக் காங்கிரஸ் விளம்பர இலாக்கா மந்திரிகள் வேண்டிய கவனம் செலுத்தவேண்டுமென்று அந்நிருபர் கேட்டுக்கொள்கிறார். அ. இ. கா. கமிட்டியும் திரைப்படங்களின் வாயிலாகத் தனக்கும் காங்கிரசுக்குமுள்ள தொடர்பை அதிகரித்துக் கொள்ளலாம்.

## சவுண்ட் ஸிடி

திரு. எ. நாராயணன் ஓர் நூதன ஸினிமா மன்றம் கட்டிமுடித்திருக்கிறார். மன்றத்தின் நீளம் 60 அடி. வீதி, 20 அடி. இக்கட்டிடத்திற்குள் பகலிலோ இரவிலோ, எந்தச் சமயத்திலும் படங்களைக் காண்பிக்கலாம். பார்ப்பவர்க்கு மிகுந்த சவுகரியங்கள் செய்யப்பட்டிருக்கின்றன. படம் ஓடிக் கொண்டிருக்கும் போதே குறிப்புகள் எழுதிக் கொள்வதற்கென ஒளி மறைக்கப்பட்ட விளக்குகள் அமைக்கப்பட்டிருக்கின்றன. பிலிம் சென்ஸார் போர்ட் தலைவர் இத்தகைய ஏற்பாடுகள் எல்லா மன்றங்களிலும் செய்யப்பட வேண்டுமெனவும், அத்தகைய ஏற்பாடுகள் அமைந்த தியேட்டர்களுக்கே அங்கீகாரப் பத்திரங்கள் அளிக்கப்பட வேண்டுமெனவும் அபிப்பிராயப்பட்டிருக்கிறார்.

தற்போது இப்புது ஸினிமா தியேட்டர் பொதுமக்களின் உபயோகத்திற்கென்று கட்டப்படவில்லை. படங்களை அதிகாரிகள் பார்த்து பொது மக்கட்குக் காண்பிக்கும் உரிமை அளிப்பதற்கும், படஉற்பத்தியாளர்களோ, டிஸ்டிரிபியூடர்களோ, தமக்கு வேண்டிய படங்களை அந்தரங்கமாகப் பார்வையிட்டு வேண்டிய சீர்திருத்தங்களை முன்னடியே செய்து கொள்வதற்குமே இத்தியேட்டர் பயன்படுத்தப்படும். படங்களை விலைக்கு வாங்குபவர்கள் இத்தியேட்டரில் முதலாவதாக அவற்றைப் பார்த்துப் பரிசீலனை செய்து விலைக்கு வாங்கிக் கொள்ளலாம். இத்தகைய முறையில் முதலாவதாகச் சென்னையில் அமைக்கப்படும் தியேட்டர் இதுவேதான்.



நேஷனல் மூவிடோனின் "ராஜமோஹன்" படத்தில் நடிக்கும் திரு. காளி என். ரெத்தினம்

---

## காலிப் பொக்கிஷத்துடன் கண்ணியமாய் வேலை செய்வது எப்படி?

### சர்தார் படேலின் சிறந்த யோசனை

சர்தார் படேல் ஆகஸ்ட் 1-ந்தேதி ஆமதாபாதில் கூடிய கூர்ஜர மாகாணக்காங்கிரஸ் கமிட்டிக் கூட்டத்தில் தலைமை வகித்துப் பேசும்போது குறிப்பிட்டதாவது:—

நாம் இனி சர்க்கார் நிர்வாகத்திலுள்ள குறைகளை மட்டிலும் கூறிக் கொண்டிருந்தால் போதாது. நிர்மாண முறையில் மந்திரிகட்கு யோசனைகள் கூறி உதவ வேண்டும். காங்கிரஸ் கமிட்டிகளை அணுகிக் குறைகளைத் தெரிவிக்க வேண்டும். பெரிய விஷயமாக விருப்பின் மந்திரிகளை நேரிற் பார்த்துக் குறைகளைத் தெரிவித்துக் கொள்ளலாம். மந்திரிகள் தற்போதுதான் பதவி ஏற்றுத் தங்கள் நிலைமையை உணர்ந்து வருகின்றார்கள். அவர்களுக்குப் போதிய அவகாசம் அளிக்கவேண்டும். தம்மால் மக்களுக்கு நன்மை யேதுஞ் செய்ய முடியாதென்று கண்டுகொண்டால் அவர்கள் தமது பதவியைத் துறக்கத் தயங்கமாட்டார்கள். அவர்களை அனாவசியமாய்க் கட்டாயப்படுத்தாமலிருப்பது நன்று. காங்கிரஸ் மந்திரிகளுடன் மக்கள் மனப்பூர்வமாக ஒத்துழைப்பாராயின் பொக்கிஷம் வெறுமையாயிருப்பினும் பொது நன்மைக்குரிய நன்மைகள் ஏதேனும் அவர்களால் செய்யக் கூடும்.

# கோலாலம்பூர்

## பிரிவு உபசாரத் தேநீர் விருந்து

சிரம்பான் கமரான் வீதி 11 நெம்பர் விவேகாநந்த நிலையத்தில், அந்நிலைய அதிபர் திரு. அ. பழ. பழநியப்ப செட்டியார் அவர்கள், தாய்நாடு செல்லும் கோலாலம்பூர் கரு. பெரி. அள. கடை அதிபர் திரு. பெ. சுப்பிரமணியன் செட்டியார் அவர்களுக்கு, 25-7-37 மாலை 4 மணிக்கு ஓர் பிரிவு உபசாரத் தேநீர் விருந்து, சிரம்பான் நாட்டுக்கோட்டைச் செட்டியார்களின் வர்த்தக சங்கத் தலைவரும், கோலாலம்பூர் நாட்டுக்கோட்டைச் செட்டியார்களின் வர்த்தக சங்க உபதலைவருமாகிய திரு. நா. கரு. இராமநாதன் செட்டியார் அவர்கள் தலைமையில் நடத்தினார்கள். விருந்திற்குப் பல அன்பர்கள் விஜயம் செய்திருந்தார்கள்.

தலைவர் அவர்கள் முன்னுரையாக, திரு. சுப்பிரமணியன் செட்டியார் அவர்களின் நற்குண நற்செயல்களைப் பாராட்டிப் பேசினார்கள் பின்னர், திரு. அ. இராமாநுஜாச்சாரியார், திரு. எ. நா. கா. நாராயணன் செட்டியார் அவர்கள், திரு. அ. பழ. பழநியப்ப செட்டியார் அவர்கள் ஆகிய மூவரும் பாராட்டுரைகள் வழங்கினார்கள். பின்னர், பிரதம விருந்தினர், தமக்களித்த விருந்திற்கு வந்தனம் செலுத்திப் பாராட்டுரைகளுக்குத் தக்க பதில் வழங்கினார்கள்.

பதில் உரை பகரும்போது, பொது வாழ்விலும் சிறப்பாக சமூக முன்னேற்றத்திலும் தமக்கு விருப்பம் அதிகம் என்றும், சமயம் நேரிடும் போது, தனவணிக சமூகத்தினரை இழித்துக் கூறுபவர்களைத் தாக்க அஞ்சியதில்லை என்றும், அதற்கு உதாரணமாக இரண்டு நிகழ்ச்சிகளையும் எடுத்துக்கூறி, மேலும் தாம் சமூக முன்னேற்ற வேலையில் இன்னும் பணியாற்றத் தயார் என்றும், அன்பர்கள் ஆசியும், கடவுள் அருளும் வேண்டும் என்றும் கூறி நண்பர்களிடம் பிரியா விடைபெற்றுக் கொண்டார்கள்.

தலைவர் அவர்கள், நண்பர் சுகமே தாய்நாடு சென்று திரும்பி வந்து சமூக முன்னேற்ற வேலைகளில் ஈடுபட இறைவனைப் பிரார்த்திப்பதாகச் சொல்லி, அழகிய முடிவுரை பகர்ந்தார்கள்.

பின்னர், திரு. வ. லெ. சா. சாமிநாதன் செட்டியார் அவர்கள் தலைவருக்கும், பிரதம விருந்தினருக்கும் மற்றவர்களுக்கும், வந்தனங்கூறித் தாம்பூலம் வழங்கியதும் பிரிவு உபசாரம் இனிது நிறைவெய்தியது.

நண்பர் திரு. பெ. சுப்பிரமணியன் செட்டியார் அவர்கள் 27—7—37 புதன்கிழமை இரவு மெயிலில் பினாங்கு சென்று அங்கிருந்து 31—7—37-ல் புறப்படும் ரஜூலா கப்பலில் தாய்நாட்டிற்குப் பிரயாணமாவார்கள்.

---

### சங்கீத வித்வான்

## டி. என். இராஜரெத்னம் பிள்ளை

### கச்சேரி விபரம்

சங்கீத வித்வான் திரு. டி. என். இராஜரெத்னம் பிள்ளை தமது பக்க வாத்திகளுடன் சங்கரநயினார் கோவில், ஸ்ரீ வில்லிபுத்தூர், இவைகளில் நடந்த உத்ஸவங்களுக்கு நாதஸ்வரக் கச்சேரி நடத்திவிட்டு ஆக. 7-ந் தேதி காலை செங்கோட்டா பாசஞ்சரில் திருவாவடுதுறை வந்து சேர்ந்தார்கள். இவர்கள் சென்ற வாரமே—இரங்கூனில் இரண்டு கச்சேரி நடத்துவதாக ஏற்பாடு ஆகி இருந்தது. காற்று ஜாஸ்தியா இருந்ததாக தெரிந்ததால் அப்பயணம் நிறுத்தப்பட்டது. இனி புரட்டாசி மாதம் முதல் வாரத்தில் புறப்படுவார்கள். ஆகஸ்ட்டு மாதம் 18-ந் தேதி 19-ந் தேதியும் புதுகோட்டையைச் சேர்ந்த விரையாச்சிலையில் நடக்கும் கும்பாபிஷேகத்தில் ஸ்ரீமான், டி. என். இராஜரெத்னம் பிள்ளை தமது சகாக்களுடன் நாதஸ்வரக் கச்சேரி நடத்துவார்கள் என ஒரு நிருபர் அறிவிக்கிறார்.

---

# மேலூர்த் தாலூகா 3-வது அரசியல் மகாநாடு

2—8—37உ மேலூர்த் தாலூகா 3-வது அரசியல் மகாநாடு வரவேற்புக் கமிட்டி மெம்பர்கள் நாவினிப்பட்டி கமலாநேரு வாசகசாலையில் ஸ்ரீ. ஆ. கருப்பஞ் செட்டியாரவர்கள் தலைமையில்கூடி வரவேற்புக் கமிட்டி கே. சீமானம்பலம் அவர்களை தலைவராகவும், ச. பொ. அய்யாச்சாமி அம்பலம் அவர்களை காரியதரிசியாகவும் அழ. வே. ராமசாமி செட்டியாரவர்களை பொக்கிஷதாரராகவும் தேர்ந்தெடுக்கப்பட்டது.

மகாநாடு 19-8-37-ந் தேதி நாவினிப்பட்டியில் நடத்துவதென்றும் அம் மகாநாட்டிற்கு, வேலூர் ஸ்ரீமான் உபயதுல்லா அவர்களை தலைவராவும் காரைக்குடி ஸ்ரீமான் சா. கணேசன் அவர்களைத் திறப்பாளராகவும் ஸ்ரீமதி வை. மு. கோதைநாயகி அம்மாள் அவர்களை கொடியேற்றுபவராகவும் இக்கமிட்டி கோருகிறது.

ஸ்ரீமான் சி. ராஜகோபாலாச்சாரியார் அவர்கள் படத்தை திறந்து வைக்கும்படி மட்டப்பாறை ஸ்ரீமான் ஆர். எஸ். வெங்கிட்டராமய்யரவர்களைக் கேட்டுக் கொள்வதாகவும் ஸ்ரீமான் ஜவஹர்லால் அவர்கள் படத்தை மதுரமித்திரன ஆசிரியர் என். சுப்ரமண்யம் அவர்களைக் கேட்டுக்கொள்வதாகவும் மகான் மகாத்மா காந்தி அவர்கள் படத்தை ஸ்ரீமான் சோமயாஜுலு அவர்கள் திறந்து வைக்கும்படி கேட்டுக்கொள்வதாகவும் இக்கமிட்டி தீர்மானிக்கிறது.

இம் மகாநாட்டுக்கு சாப்பாட்டுடன் வரவேற்புக் கட்டணம் ரூ. 1—0—0 ம் பிரதிநிதிக் கட்டணம் ரூ. 0—8—0 ம் பார்வையாளர் கட்டணம் ரூ. 0—1—0 மாக இக்கமிட்டி தீர்மானிக்கிறது.

விவசாயிகள் மகாநாட்டிற்கு தலைமை வகிக்கும்படி பசும்பொன் ஸ்ரீமான் உ. முத்துராமலிங்கத்தேவரவர்களை இக்கமிட்டி சிபார்சு செய்வதாகத் தீர்மானிகிறது.

---



(14-ம் பக்கத் தொடர்ச்சி)

தெல்லாம் உத்தியோக மோகமுடையவர் கூப்பாடே யல்லாது தேச ஊழியம் செய்பவருடையவோ காங்கிரஸ் நலம் கருதுபவருடையவோ பேச்சல்ல. இப்போது மந்திரிகளாயிருப்பவர்கள் அந்தஸ்துக்காக இந்த ஸ்தானத்தில் இருக்கும்படி காங்கிரசால் விட்டு வைக்கப்படவில்லை. சாசுவதமாக ஆசனங்களை அலங்கரிக்கவும் விட்டிருக்கப்படவில்லை. காங்கிரஸ் ஆணையை நிறைவேற்றுவதோடு எந்த நிமிஷத்திலும் வெளியேறத் தயாராயிருக்க வேண்டும்.

இத்தகைய ஸ்தானத்தை திரு. ராமசாமியார் மிகத் தவறாக உணர்கிறார். அவர்!

> "இதற்காகவா (பிராமணாதிக்கம் பெருகுதற்காகவா!) காங்கிரஸ் பதவி ஏற்கவேண்டுமென்று நாம் தவங்கிடந்தோம்? இதற்காகவா காலத்தையும் பணத்தையும் பாழாக்கினோம்? இதற்காகவா படாதபாடெல்லாம் பட்டோம்?"

என்று வினவுகிறார். யார் இவரை தபங்கிடக்க சொன்னார்கள்? அடபாவமே! இவர் ஆதிமுதலே பதவி ஏற்க வேண்டுமென்று குட்டிக்கரணம் போட்டிருக்கிறார் போலிருக்கிறதே! நல்லவேளை! காங்கிரஸ் பதவி ஏற்பு மட்டிலும் வேண்டாமென்று தீர்மானம் செய்திருக்குமானால் இந்த பாரிஸ்டர் மனமுடைந்து செத்துப் போயிருப்பார் போலிருக்கிறதே! இவருக்கு புரட்சிப் பான்மையும் சர்க்காரோடு போராடி விடுதலை பெற வேண்டுமென்ற ஆசையுமிருக்கிறதென்று யாரேனும் சொல்ல முடியுமா? அப்படிப்பட்டவர் காங்கிரஸ்காரரா?

* * *

திரு. ராமசாமியார் பிராமணாதிக்கத்தைக் கண்டிக்க வேண்டுமென்ற நோக்கத்துடன் மட்டிலும் பிரஸ்தாபக் கட்டுரை எழுதியிருப்பதாகத் தோற்றவில்லை. பொதுவாக மந்திரிசபை மீது ஏதேனும் சொல்ல வேண்டும் போலிருக்கிறது; ஆகவேதான் பிராமணரல்லாதாராகிய டாக்டர் சுப்பராயன், வெங்கடசாமி நாயுடு முதலியோரையும் சுட்டிப் பேசுகிறார்.

ராஜாஜியின் சகோதரரொருவர் டாக்டர் சுப்பராயனின் மிட்டா மானேஜராக விருக்கிறாராம். ஆதலால் பற்றித்தான் டாக்டர் சுப்பராயனுக்கு மந்திரி வேலை கொடுக்கப்பட்டது என்கிறார்.

டாக்டர் சுப்பராயன் இவ்வளவு மோசமானவரா! தான் தன் வேலைக்காரரின் சகோதரரின் வேலைக்காரராகும்படியான அவ்வளவு யோசனை கெட்டவரா சுப்பராயன்?

சுருக்கத்தில், பாரிஸ்டர் ராமசாமி ஏகாதிபத்யத்திற்கெதிராக புரட்சி செய்து அதனை உடைக்க வேண்டுமென்ற மனப்பான்மையும், தேச நலமும் காங்கிரஸ் நலமும் கருதுகின்ற திடசித்தமும் இல்லாதவர் போலிருக்கிறது. ஆதலாலேயே முன்னுக்குப்பின் முரணாக ஏதேதோ எழுதி மந்திரிப்பதவி சரியாக அமையவில்லை என்கிறார். அந்த மனப்பான்மை ஜஸ்டிஸ் மனப்பான்மையாகும். உண்மையான காங்கிரஸ் தீவிரவாதிகள் மந்திரி பதவியே தேவையில்லை என்று கூறி மற்றொரு போராட்டத்திற்குத் தயாராகுகிறார்கள். இந்த நிலைமையில் திரு. ராமசாமி மந்திரிப் பதவி தம் நண்பர்கட்குக் கிடைக்கவில்லை என்று காங்கிரசல்லாதார் பத்திரிகைகளைத் துணை கொண்டு அழுவாரானால் அவரை என்னென்பது? நண்பர்களே! அவர் சொல்லுக்கு செவி சாய்க்கலாமா?

* * *

### குழம்புபவர் பார்வைக்கு

### மந்திரிப் பதவி ஏன்?

> "பொதுமக்களின் சக்தியை வளர்த்து, அதனைச் சுதந்திரம் பெறும் முறையில் பயன்படுத்தும் நோக்கத்துடனேயே காங்கிரஸ், சர்க்கார் உத்தியோகங்களை ஏற்றுக்கொண்டது."

திரு. மோரார்ஜீ தேசாய்.
(பம்பாய், வரி வருமான இலாகா மந்திரி.)

---

# சென்னை அலுமினியத் தொழிலாளர் வேலை நிறுத்தம்

## காரணமும் நிகழ்ச்சிகளும்

சென்னை ராயபுரம் ஸ்ரீ. கணேசர் அலுமினியம் பாக்டரி யூனியன் தலைவர் திரு. பி. ஆர். கே. சர்மா சென்னைக் கைத்தொழில் மந்திரி கனம் வி. வி. கிரிக்கு ஓர் நிருபம் அனுப்பியிருக்கிறார். அஃது அலுமினியப் பாக்டரித் தொழிலாளர்களின் குறைகளை ஆதியோடந்தமாக எடுத்து விளக்குகிறது. அதன் சாராம்சத்தைக் கீழே காணலாம்.

இவ் வேலைநிறுத்தம் திடீரென ஏற்பட்டதல்ல. வெகு நாட்களாகவே காரியஸ்தர்கட்கும் தொழிலாளர்கட்கு மிடையே புகைந்துகொண்டிருந்த சச்சரவின் பயனேயிது.

பெப்ரவரி 1937-ல் ஒரு வேலை நிறுத்தம் ஏற்பட்டது. அஃது ஒரு மாதம் வரையிலும் நீடித்திருந்தது. தொழிலாளர்களும் சமாசம் செய்ய முயன்ற தொழிலாளர் தலைவர்களும், நேரிய முறையில் நடத்தப்படவில்லை. காங்கிரஸ் தலைவர்களின் தலையீட்டினால் மீண்டும் வேலை ஆரம்பிக்கப்பட்டது. ஆனால் கூலிகளை உயர்த்திக் கொடுப்பதாய் அளித்த வாக்குறுதி இன்னும் நிறைவேற்றப் படாமலே யிருக்கின்றது.

மேல்பார்வையாளர்கள் நியாயம் தவறி நடந்து கொண்டதால், மூன்று முறை வேலைநிறுத்தங்கள் செய்யப்பட்டன. ஆனால் யூனியன் அதிகாரிகளின் தலையீட்டினால் நிலைமை சமாளிக்கப்பட்டது.

ஜூன் மாத ஆரம்பத்தில் யூனியன் மெம்பரும், தந்தப் பாலீஷ் தொழில் செய்பவருமான தோழர்

காளப்பன் மேர்பார்வையாளரான திரு. கேசவலாலால் அடிக்கப்பட்டார். அவர் ஏதோ சிரித்துக்கொண்டிருந்ததாகக் காரணம் சொல்லப்படுகிறது. உண்மையில் அப்படியொன்லும் செய்யவில்லை. எவ்வளவோ மன்ருடியதற்குப் பின் வேலையில் மீண்டும் சேர்த்துக்கொள்ளப்பட்டார்.

இதன்பின் திரு. கேசவலாலுக்கும் வேருெரு ஸ்பின்னிங் டிபார்ட்மெண்டிலுள்ள தொழிலாளருக்கும் சச்சரவு ஏற்பட்டு ஒருவரையொருவர் தாக்கிக் கொண்டார்கள். ஆகலால் மானேஜரின் ஆலோசனையின் பேரிலேயே சில சவுரவம் வாய்ந்த தொழிலாளிகள் மானேஜர் திரு. ஹேம்சந்து ஷாவைக் கலந்து பேசினர். தோழர் குப்புசாமி என்பவர் ஒரு மெட்டல் பிட்டர். அவரது பேச்சைக் கேட்ட மானேஜர் கோபமூண்டு, அவரது காதைப் பிடித்துப் பிடித்திழுத்து வாயில் வந்தவாறெல்லாம் இழித்துப் பேசி, அவரை வேலைக்குச் செல்லாமல் தடுத்துவிட்டார். பின்னர் தொழிலாளர் பிரதிநிதிகளுடன் சமரஸம் ஏற்பட்டு, டிபார்ட்மெண்டில் வேலை ஆரம்பமாகி 10 தினங்கட்குப் பின்னர் குப்புசாமி சேர்த்துக் கொள்ளப்பட்டார். அதுபோது தமது விருப்பத்துக்கு எதிரிடையாகவே ஒரு மன்னிப்புப் பத்திரம் வாசித்துக் கொடுக்க வேண்டியதாயிற்று.

தோழர் சகாதேவன், தந்தப் பாலிஷ் செக்ஷன் மேஸ்திரி. யூனியன் நிர்வாகக் கமிட்டி மெம்பர். இவரது பிரிவில் 25 வேலையாட்கள் உண்டு. ஆரம்பத்தில் 12 பேர்கள் தான் இருந்தனர். அவரது வேலைகள் அதிகமாகவும் நெருக்கடியாகவுமிருந்தபடியால் ஒருவரைத் துணையாக நியமித்துக் கொடுக்கக் கேட்டுக் கொண்டிருந்தார். பாக்டரி நிர்வாகஸ்தர்கள் அதனைப் பொருட்படுத்தவேயில்லை. இத் தொழிற்சாலையில் நாளொன்றுக்கு ஆயிரக் கணக்கான டம்ளர்கள் உற்பத்தி செய்யப்படுகின்றன. அதில் ஒன்றிரண்டு டம்ளர்களில் சிலவரைகள் கீரப்பட்டிருந்தன. இதைக் கண்ணுற்ற சூபர்வைசர் கேசவலால் உடனே சகாதேவனை வேலையிலிருந்து நீக்கிவிட்டார். இது 7-7-37 அன்று நிகழ்ந்தது. எவ்வளவோ மன்ருடியும் இன்னும் அவர் வேலையில்லாமலே திண்டாடுகிருர்.

17-7-37-ல் இரண்டு பையன்கள் சண்டையிட்டுக் கொண்டார்கள். நிர்வாகஸ்தர்களில் ஒருவரான விட்டல்தாஸ் அவ்விருவரையும் பிற்பகல் 2 மணி முதல் 4½ மணிவரையிலும் உரக்கக்காயும் வெயிலில் நிற்பாட்டி வைத்தார். பின்னர் இருவரையும் போலீஸ் ஸ்டேஷனுக்கு இட்டுச் சென்று அவர்களில் சின்னையா என்பவனை 'லாக்அப்'பில் அடைக்கும்படிச் செய்து, "இனி ஜே சொல்லு பார்ப்போம்!" என்று கேலி செய்தாராம். காரணம், இந்த நிகழ்ச்சிக்கு முன் தினம் காங்கிரஸ் மந்திரி சபை அமைப்பு சம்பந்தமாக தொழிலாளிகள் ஒரு கொண்டாட்டத்தை நடத்தியதேயாகும். இவர்கள் விடுதலை செய்யப்பட்டுச் சில நாட்கள் வரையிலும் வேலையில் சேர்க்கப்படாமலே இருந்தார்கள்.

22-7-37-ல் தோழர் ராஜு—ரோலிங் டிபார்ட்மெண்டைச் சேர்ந்தவர்—யூனியன் அங்கத்தினர்—பாத்திரம் செய்யப்படும் உலோகத்தில் ஏதோ கெட்ட கலப்பு இருப்பதாய்த் தொழில் மானேஜரான ஜாடாலாலிடம் எச்சரிக்கை செய்தார். ஆரம்பத்தில் சில டம்ளர்கள் வெடித்துப் போயின. என்ருலும் திரு. ஜாடாலால் மேலும் வேலை செய்யச் சொன்னுர். அன்று மாலையில் 300 டம்ளரில் 62 டம்ளர்கள் கெட்டுப் போய்விட்டன. மறுநாள் வேலைக்கு வந்ததும் அவரது பெயருள்ள சீட்டு விலக்கப்பட்டிருப்பதைக் கண்டார். திரு. ஜாடாலாலைக் கேட்டபோது அவர் "உமது வேலை எங்கட்குத் தேவையில்லை" என்று சொல்விட்டார். 26-7-37 அன்று தோழர் ராஜுவின் டிப்பார்ட்மெண்டில் வேலை பார்க்கும் எஞ்சிய ஆறு தொழிலாளர்களும் பொதுக் காரியஸ்தராகிய திரு. ஹேம்சந்தைச் சந்தித்துப் பேசிய போது அவர் செய்யுங் காரியங்களில் தலையிடுவதற்குத் தொழிலாளர்கட்கு அதிகாரமில்லை என்று வெட்டெனப் பேசிவிட்டார்.

29-ந் தேதியன்று மத்தியானம் 1-15 மணிக்கு "ரோலிங் டிப்பார்ட்மெண்டில் ஒருவர் புதிதாய் நியமித்திருப்பதைக் கண்ட தொழிலாளர்கள் அனைவரும் திடுக்கிட்டுப் போயினர். அப்பிரிவைச் சேர்ந்த நிரந்தரத் தொழிலாளர்களான ஏழு பேரும் பாக்டரி வாசலில் காத்து நின்றுக் கொண்டிருந்தார்கள்.

எனவே நிரந்தரமாய் வேலை பார்த்து வருபவரின் குறைகளை கவனித்து அவர்கட்கு நியாயம் வழங்காமல், புதிய ஒரு நியமனம் செய்ததைக் கண்டிக்கும் முகத்தான் பாக்டரியிலுள்ள எல்லாத் தொழிலாளர்களும் வேலை நிறுத்தம் செய்ய நேரிட்டது.

திரு. ஜாடாலால் ஒவ்வொரு டிப்பார்ட்மெண்டிலுமுள்ள இரண்டு பிரதிநிதிகளை அழைத்துப் பேசினுர். பலன் முன் சந்தர்ப்பங்களின் முடிவு போலவே ஆயிற்று. வேலை நிறுத்தம் செய்ய வேண்டுமென்ற விருப்பம் தொழிலாளர்கட்கு இல்லை. புதிதாய் நியமிக்கப்பட்டவரை வெளியேற்ற வேண்டுமெனவும் அவர்கள் வற்புறுத்தவில்லை. பழைய தொழிலாளர்களை மீண்டும் சேர்த்துக்கொள்ள வேண்டுமென்பதே அவர்களது வேண்டுகோள். வழக்கமாய் மாலை 5 மணிக்குத் தொழிற்சாலைக் கதவடைப்பது வழக்கம். ஆனல் அன்ரே 4-5-க்கே 'ஹூடர்' ஒலியைக் கிளப்பிக் கதவைச் சாத்திவிட்டார்கள்.

30-ந் தேதியன்றும் தொழிலாளர்கள் பாக்டரிக்குச் சென்ருர்கள். தொழில் ஆரம்பிப்பதற்குரிய சின்னங்கள் ஒன்றுங் காணவில்லை. கதவடைப்பு இன்னும் தொடர்ந்து கொண்டுதானிருக்கிறது.





## கடன் பத்திரங்களும் பங்குகளும்

(ட்ரோஜன் கம்பெனியாரிடமிருந்து)

சென்னை, ஆகஸ்டு, 10.

| சர்க்கார் கடன் பத்திரங்கள் :— | | வாங்கும் விலை | விற்கும் விலை |
|---|---|---|---|
| | | ரூ. அ. | ரூ. அ. |
| 2¾ % புதிய கடன் 1948-52 | (வரியுள்ளது) | 100—8 | 100—10 |
| 3 „ 1941 | (வரியுள்ளது) | 104—3 | 104—5 |
| 3 „ 1951-54 | „ | 101-12 | 101-14 |
| 3 „ ஜி. பி. நோட்ஸ் | „ | 87—7 | 87—9 |
| 3½ „ „ | „ | 97—5 | 97—7 |
| 3¾ „ 1947-50 | „ | 106-13 | 106-15 |
| 4 „ 1943 | „ | 108—5 | 108—7 |
| 4 „ 1960-70 | „ | 111-11 | 111—13 |
| 4½ „ 1955-60 | | 118—3 | 118—5 |
| 5 „ 1939-44 | „ | 105-13 | 105—15 |
| 5 „ 1940-43 | „ | 108-3 | 108—3 |
| 5 „ 1945-55 | (வரியில்லாதது) | 120—4 | 120—6 |
| 5½ „ 1938-40 | (வரியுள்ளது) | 104—4 | 104—6 |
| 3 „ 1956-61 மைசூர் | (வரியில்லாதது) | 101—2 | 101—6 |
| 3½ „ 1951-58 „ | „ | 105—6 | 105-10 |
| 4 „ 1953-63 „ | „ | 110-14 | 111—2 |
| 5 „ 1955 „ | „ | 122-14 | 123—2 |
| 5½ „ 1938 „ | „ | 103-14 | 104—2 |
| 6¼ „ 1940 „ | „ | 111—6 | 111-10 |
| 6½ „ 1941-51 „ | „ | 115-6 | 115—10 |
| 3½ „ 1956-61 கொச்சின் | „ | 101-10 | 101-14 |
| 5 „ 1943-53 கொச்சின் | | 110-4 | 110—12 |
| 3 „ 1956 திருவாங்கூர் | | 102-4 | 103— |

| பாங்கி:— | | | ரூ. |
|---|---|---|---|
| ரிஸர்வ் | பாங்க் | | 126/ |
| இம்பீரியல் | „ | F. P. | 1,527½ c. d. |
| „ | „ | P. P. | 376¼ |
| இந்தியன் | பாங்க் | (Big) | 128 c. d. |
| „ | „ | (Small) | 26/ c. d. |
| ஸெண்டிரல் | „ | | 33¼ c. d. |

வெள்ளி:—(சென்னை)

தங்கம்—(சென்னை)

ப்ரோச் பஞ்சு—(பம்பாய்)
ஜுலை—ஆகஸ்டு.

## ரயில் போக்கு வரவு

### மதருஸ்-எழும்பூர்

மெயின் லைன்

| வண்டிப் பெயர் | புறப்படும் நேரம் | வரும் நேரம் |
|---|---|---|
| இண்டோ-ஸிலோன் எக்ஸ்பிரஸ் .... | மாலை 9 0 | காலை 6 35 |
| செங்கோட்டை பாஸஞ்சர் .... | காலை 7 30 | மாலை 7 00 |
| கூடலூர் பாஸஞ்சர் .... | மாலை 4 00 | காலை 10 55 |
| திருவனந்தபுரம் பாஸ்டு பாஸஞ்சர்.... | மாலை 9 30 | காலை 6 00 |
| திருச்சி பார்சல் .... | மாலை 10 25 | காலை 5 15 |

கார்டு லைன்

| வண்டிப் பெயர் | புறப்படும் நேரம் | வரும் நேரம் |
|---|---|---|
| தனுஷ்கோடி பாஸ்டு பாஸஞ்சர் .... | காலை 11 35 | மாலை 2 40 |
| திருவனந்தபுரம் எக்ஸ்பிரஸ் .... | மாலை 8 5 | காலை 7 15 |

### மதராஸ்—சென்ட்ரல்

| வண்டிப் பெயர் | புறப்படும் நேரம் | வரும் நேரம் |
|---|---|---|
| கல்கத்தா மெயில் | மாலை 8 30 | காலை 8 00 |
| கிராண்டு டிரங்க் எக்ஸ்பிரஸ் .... | காலை 7 55 | மாலை 5 10 |
| பம்பாய் மெயில் | மாலை 9 00 | காலை 5 55 |
| பம்பாய் எக்ஸ்பிரஸ் .... | காலை 8 45 | மாலை 4 55 |
| பங்களூர் மெயில் .... | மாலை 9 30 | காலை 6 10 |
| „ எக்ஸ்பிரஸ் .... | மாலை 1 0 | காலை 2 00 |
| „ பாஸஞ்சர் .... | காலை 6 30 | மாலை 7 45 |
| „ „ .... | மாலை 9 40 | காலை 5 30 |
| ஜோலார்ப்பேட்டை பாஸஞ்சர் .... | மாலை 1 5 | காலை 1 45 |
| அரக்கோணம் பாஸஞ்சர் .... | மாலை 6 30 | காலை — |
| காட்பாடி பாஸஞ்சர் .... | 5 30 | 9 45 |
| மலபார் எக்ஸ்பிரஸ் .... | காலை 8 5 | 7 20 |
| புனு மௌண்டன் எக்ஸ்பிரஸ் ... | 9 15 | 6 30 |

# விலைவாசிகள்

## வட்டி விகிதம்

ரெங்கூன் நடப்பு வட்டி

| | | | | |
|---|---|---|---|---|
| ஈஸ்வர சித்திரை வட்டி | ரூ. | 0 | 4 | 0 |
| ,, வைகாசி ,, | | 0 | 4 | 0 |
| ,, ஆனி ,, | ரூ. | 0 | 4 | 0 |

மதராஸ் நடப்பு வட்டி

| | | | | |
|---|---|---|---|---|
| ஈஸ்வர சித்திரை வட்டி | ரூ. | 0 | 7 | 0 |
| ,, வைகாசி ,, | ரூ. | 0 | 6 | 6 |
| ,, ஆனி ,, | ரூ. | 0 | 6 | 6 |
| ,, ஆடி ,, | ரூ. | 0 | 6 | 3 |

செய்கோன்

17—7—37

ஈஸ்வர ஆனிமீ நடப்பு வட்டி,
தவணை வட்டி விபரம் 0 4 0

நெல் விலை பிக்கல் 1-க்கு 3$40லிருந்து 3$45 வரை.

அரிசி விலை 3$92லிருந்து 3$94.

உண்டியல் விலை இந்தியாவுக்கு செய்கோன் ரிங்கி 100-க்கு ரூபா. 100-1/?.

சிங்கப்பூருக்கு.......
செய்கோன் ரிங்கி 100க்கு
சிங்கப்பூர் 64 3/4.

பினங்கு

| | | | |
|---|---|---|---|
| ஈஸ்வரவைகாசி நடப்பு வட்டி | 0 | 4 | 0 |
| ,, ,, தவணை வட்டி 1உ | 0 | 3 | 6 |
| ,, ,, தவணை ,, 16உ | 0 | 3 | 6 |

சிங்கப்பூர்

| | | | |
|---|---|---|---|
| ஈஸ்வர ஆனி நடப்பு வட்டி | 0 | 4 | 0 |
| ,, ,, 1உ தவணை ,, | 0 | 3 | 6 |
| ,, ஆனி 16உ ,, | 0 | 3 | 6 |

## தங்கம், வெள்ளி

சென்னை, ஆக, 10உ

| | | | |
|---|---|---|---|
| பம்பாய் ஆலைத் தங்கம் | 34 | 5 | 6 |
| ஷை வாய்தா | 34 | 7 | 0 |
| மூனா தோலா 1-க்கு | 33 | 15 | 6 |
| சவரன் மொத்தம் | 22 | 1 | 3 |
| சவரன் சில்லரை | 22 | 1 | 6 |
| வெள்ளி ரூ. 100 எடை | 52 | 7 | 6 |
| ஷை ரூ. 1 எடை | 0 | 8 | 9 |

வட்டி

ரிசர்வ் பாங்க் வட்டி:—3 பெர்செண்டு
இங்கிலாந்து பாங்க் வட்டி:—2 பெர்[செண்டு

ரப்பர்

லண்டன், ஆகஸ்டு, 9உ

புகைபோட்ட ரப்பர்
,, வாங்குபவர் விலை 9 பென்ஸ்
,, விற்பவர் ,, 9 1/8 ,,

விரையாச்சிலை
வில்வவனநாத சுவாமி
கும்பாபிஷேகம்

கமன சமுத்திரம் (புதுக்கோட்டை) ரயில்வே ஸ்டேஷனுக்கு மேற்கே 7 மைல் தொலைவிலிருக்கும் விரையாச்சிலையில் ஸ்ரீ ரக்ஷாவதாரியம்பா சமேத ஸ்ரீ வில்வவனநாத சுவாமி கோவிலில் ஆவணி 4-ந் தேதி அஷ்டபந்தன மகா கும்பாபிஷேகம் நடைபெறுமென்றும் அன்றும் முந்திய இருதினங்களிலும் அரிய பாண்டு, நாதஸ்வரக் கச்சேரிகளும், கதா கால க்ஷேமமும் நிகழுமென்றும் அறிவிக்கப்படுகிறது.

## கப்பல்

சென்னையிலிருந்து
ரங்கூன்

எரின்புரா:- ஆக 13-ந் தேதி புறப்படும்.

எத்தோபியா:—ஆக 16-ந் தேதி வந்து ஆக 20-ந் தேதி புறப்படும்.

மலாயா—சென்னை

ரோஹ:—ஆக. 21-ந் தேதி வந்து ஆக. 24-ந் தேதி புறப்படும்.

ரஜூலா:—செப் 4-ந் தேதி வந்து 7-ந் தேதி புறப்படும்.

நாகப்பட்டணத்திலிருந்து
மலாய் நாட்டுக்கு

ரோஹ 29—8—3

மலாய் நாட்டிலிருந்து
நாகப்பட்டணத்துக்கு

ரோஹ 19—8—3

மதராசிலிருந்து
சிங்கப்பூர் செய்கோனுக்கு
புறப்படும் கப்பல்கள்

(வி. கே. அய்யர் அறிவிக்கிறார்)

தெர்தக்னன் 31—8—3

(இதன் நகல் ஒன்று சென்னை ஜாயிண்டு ஸ்டாக் கம்பெனி அஸிஸ்டெண்டு
ரெஜிஸ்ட்ரார் ஆபீஸில் தாக்கல் செய்யப்பட்டிருக்கிறது.)

# தி ராஜேந்திரா பிலிம் கம்பெனி லிமிடெட்.

(1913-ம் வருடத்து இந்தியகம்பெனிகளின் சட்டப்படி ரெஜிஸ்டர் செய்யப்பட்டது.)

---

அதிகாரம் பெற்ற மூலதனம் ரூ. லட்சமும் (10,0000) முழுச் சந்தா தொகை செலுத்தும் படி பங்கு ஒன்றுக்கு ரூ. (10) பத்து வீதம் (10,000) பங்குகளாகப் பிரிக்கப்பட்டிருக்கிறது.

டைரக்டர்களும் அவர்களின் நண்பர்களும் முழுவதும் செலுத்தப்பட்ட (1135) பங்குகள் எடுத்துக்கொள்வதாக உறுதி சொல்லியிருக்கிறார்கள். மீதியுள்ள 8865 பங்குகளே விற்பனைக்குத் தயாரா யிருக்கின்றன.

**டைரக்டர்கள்**

(1) சு. ப. பூமிநாதன் செட்டியார் அவர்கள், தேவகோட்டை.
டைரக்டர்:—தி நகரத்தார் இன்வெஸ்ட்மெண்டு
கார்பொரேஷன் லிமிடெட்.
டைரக்டர்:—இந்தியா பப்ளிகேஷன்ஸ் லிமிடெட்.

(2) முத்து கரு. அரு. கரு. அருணாசலம் செட்டியார் அவர்கள்,
எம். எல். ஏ., தேவகோட்டை.
டைரக்டர்:—நாட்டுக்கோட்டா பாங்கி லிமிடெட்.
டைரக்டர்:—நகரத்தார் இன்வெஸ்ட்மெண்டு கார்ப்பொரேஷன் லிமிடெட்.

(3) முத்து கரு. அரு. பள. அருணாசலம் செட்டியார் அவர்கள், பாங்கர், தேவகோட்டை.

(4) AL. V. KR. அளகப்ப செட்டியாரவர்கள், பாங்கர், தேவகோட்டை.

(5) V. முத்தையா செட்டியார் அவர்கள், தேவகோட்டை (எக்ஸ் அபிஷியோ)

(6) மெ. சி. மாணிக்கவாசகன் அவர்கள், தேவகோட்டை (எக்ஸ் அபிஷியோ)

**பாங்கர்ஸ்**

இந்தியன் பாங்கி லிமிடெட்.

**ஆடிட்டர்**

P. S. சுப்பிரமணிய அய்யர் அவர்கள், B. A., G. D. A., R. A.,
லிங்கிசெட்டித் தெரு, ஜி. டி. மதராஸ்.

**லீகல் அட்வைஸர்**

C. சோமசுந்தரம் செட்டியார் அவர்கள், L. L. B. (Lond)
பார்-அட்-லா, மெட்ராஸ்.

**மானேஜிங் ஏஜெண்டுகள்.**

மெஸர்ஸ் ஸரோவர் அண்டு கோ, மெட்ராஸ்.

**ரெஜிஸ்டர்டு ஆபீஸ்.**

15, மௌபரீஸ் ரோடு, மயிலாப்பூர், சென்னை.

1. கம்பெனியின் நோக்கங்கள் :—

சினிமாப் படங்கள், பிலிம்கள், பேசும் படங்கள், ஓடும் படங்கள், போனோகிராப் ரிகார்டுகள் தயார் செய்யவும், தயார் செய்ய ஏற்பாடு செய்யவும், இவைகளை வாங்கவும், விற்கவும், கொள்ளவும், கொடுக்கவும், வாடகைக்கு வாங்கவும், கொடுக்கவும் இன்னும் இவைகள் சம்பந்தப்பட்டதாய் "மெமோராண்டத்தில்" குறிப்பிட்ட அலுவல்களை நடத்த இந்தக் கம்பெனி கூட்டப்பட்டிருக்கிறது.

2. இந்தக் கம்பெனிக்கு மெஸர்ஸ் ஸரோவர் அண் கோ மானேஜிங் ஏஜெண்டுகளாக ஏற்பட்டது மிகவும் பாராட்டத்தக்கது.

நடிப்புத் திறமையிலும் சினிமா முதலிய தியேட்டர்கள் நடத்தி மிக அனுபவம் வாய்ந்த திரு. மெ. சி. மாணிக்கவாசகன் அவர்கள் மேற்படி மானேஜிங் ஏஜெண்டான கம்பெனிக்கு பாகஸ்தராக இருப்பது ஒரு முக்கிய அம்சம்.

3. ஒப்பந்தம் (Agreement)

மெஸர்ஸ் ஸரோவர் அண் கோவை மானேஜிங் ஏஜெண்டுகளாக நியமித்து அதற்காக இந்தக் கம்பெனியும் மெஸர்ஸ் ஸரோவர் அண் கோவும் 26—5—1937 ல் ஒரு ஒப்பந்தம் செய்து கொண்டிருக்கிறார்கள்.

ஸரோவர் அண் கோவின் பாகஸ்தர்களான திருவாளர்கள் மெ. சி. மாணிக்கவாசகனும், முத்தய்யா செட்டியாரும் மேற்படி மானேஜிங் ஏஜெண்டுகளான மெஸர்ஸ் ஸரோவர் அண் கோவின் சார்பாக இந்தக் கம்பெனியின் எக்ஸ் அபிஷியோ டைரக்டர்களாக இருப்பார்கள். இவர்களே மேற்குறித்த மானேஜிங் ஏஜென்ஸி ஒப்பந்தத்தில் சம்பந்தப்பட்டவர்கள்.

இந்தக் கம்பெனியின் ஒரு டைரக்டரான திரு. S. P. பூமிநாதஞ் செட்டியாரவர்கள் மேற்படி மானேஜிங் ஏஜெண்டுகளான ஸரோவர் அண் கோவின் ஒரு பாகஸ்தராய் இருப்பதால் மேற்படி "ஸரோவர் அண் கோ" அடையும் பலன்களில் பாத்தியம் உள்ளவராவர்.

4. டைரக்டர்களின் அந்தஸ்தும் அவர்களின் பிரதிபலனும்.

கூட்டு நிபந்தனையின்படி (Articles of Association) எக்ஸ் அபிஷியோ டைரக்டர்களைத் தவிர வேறு எவரும் குறைந்தது (100) பங்குகள் எடுத்தே இந்தக் கம்பெனியின் டைரக்டர்களாகும் அந்தஸ்தை அடைவார்கள்.

டைரக்டர் போர்டு மீட்டிங் நடக்கும் சந்தர்ப்பங்களில் எக்ஸ் அபிஷியோ டைரக்டர் உள்பட ஒவ்வொரு டைரக்டருக்கும் தினசரிப் படி ரூ. (3) ம் மேற்படி மீட்டிங் நடக்கும் இடத்திற்கு தன் சொந்த இருப்பிடமிருந்து போகவர இரண்டாம் வகுப்பு ரயில்வே கட்டணமும் வழங்கப்படும். எந்த டைரக்டராவது கம்பெனிக்காக இதர அல்லது பிரத்யேக அலுவல்கள் செய்யும்படி நேரிட்டால் அது வகைக்கு இந்தக் கம்பெனி பிரத்யேக அலௌவன்ஸை அல்லது பிரதிபலன் அனுமதிக்கலாம்.

5. ஸ்தாபகர்களும் ஆரம்ப செலவுகளும் (Promoters)

"மெஸர்ஸ் ஸரோவர் அண்டு கம்பெனியார்"கள் இந்தக் கம்பெனியை ஸ்தாபிக்க மிகவும் சிரத்தை எடுத்தும், ரெஜிஸ்டர் செய்தல், அது சம்பந்தமான ஸ்டாம்பு, அச்சுக்கூலி, எழுத்துக்கூலி, வக்கீல் பீஸ், அபிப்பிராய பீஸ் முதலிய இன்னும் இதர ஆரம்பச் செலவுகள் செய்ததற்காக இந்தக் கம்பெனியார் ஷை "ஸரோவர் அண்கோ"வுக்கு ரூ. (2000) மொத்தமாகக் கொடுப்பார்கள். மேற்சொன்ன ஆரம்பச் செலவுகளை இந்த (2000) ரூபாயிக்கு மேல் இன்னும் ரூ. (500) இருக்குமென்று இந்தக் கம்பெனியின் டைரக்டர்கள் மதிப்பிடுகிறார்கள்.

6. மானேஜிங் ஏஜண்டுகளின் நியமனமும் பிரதிபலனும்

இந்தக் கம்பெனி ரிஜிஸ்தர் ஆன தேதியிலிருந்து (20) வருஷம் வரை மெஸர்ஸ் ஸரோவர் அண் கோ இந்தக் கம்பெனியின் மானேஜிங் ஏஜண்டுகளாக இருக்கக் "கூட்டு நிபந்தனை"யின்படி அதிகாரம் பெற்றிருக்கிறார்கள்.

இந்தக் குறிப்பிட்ட 20 வருடத்தின் முடிவில் மேற்படி மானேஜிங் ஏஜண்டுகள் இன்னும் 20 வருடங்களுக்கோ அல்லது அதற்குக் குறைந்த ஒரு காலத்திற்கோ இக்கம்பெனியின் "போர்டு ஆப் டைரக்டர்"களின் சிபார்சின்மேல் ஜெனரல்பாடி மீட்டிங்கில் அங்கீகாரம் செய்யப்பட்டால் திரும்பவும் மானேஜிங் ஏஜண்டுகளாக நியமனம்பெற தகுதியாகலாம். மானேஜிங் ஏஜண்டுகள் கீழே கண்ட பிரதிபலன்களை அடைவார்கள்.



(a) கம்பெனியின் ஆரம்பத் தேதியிலிருந்து மாதம் ஒன்றுக்கு ரூ. (250) ஆபீஸ் அலௌவன்ஸும்,

(b) கம்பெனியின் வருட நிகரலாபத்தில் 100-க்கு 12½ அம்சம் % கமிஷனும், அப்படி வழங்கப்படும் கமிஷன் எந்தக் காரணத்திலும் எப்படியும் வருடத்துக்கு ரூ. 3000-க்கு குறையாமல் இருக்கும்.

(c) மேற்சொன்ன மாத அலௌவன்ஸும் கமிஷனும் தவிர, போர்டு ஆப் டைரக்டரின் சிபார்சின்படி, ஜெனரல்பாடி மீட்டிங்கில் அனுமதிக்கப்பட்ட இதர அலௌவன்ஸ்களும் பெறலாம். மானேஜிங் ஏஜண்டுகள் சென்னையில் கம்பெனியின் அலுவல்களை நடத்தத் தகுதியான ஒரு ஆபீசை நியமனஞ்செய்து அந்த ஆபீஸ் சம்பந்தமான உத்தியோகஸ்தர்களின் சம்பளங்களையும் இதர செலவுகளையும் இந்தக் கம்பெனி தர அனுமதிக்கும்.

7. குறைந்த சந்தா.

குறைந்தது (1000) பங்குகளின் சந்தா செலுத்தப்பட்ட பிறகே மேற்படி பங்குகளை டைரக்டர்கள் அலாட்மெண்டு செய்யத் தொடங்குவார்கள்.

8. தஸ்தாவேஜுகள்.

கம்பெனியின் மெமொராண்டம், ஆர்ட்டிகல்ஸ் ஆப் அசோஸியேஷன், இந்த க்கம்பெனியும் மானேஜிங் ஏஜெண்டுகளும் செய்துகொண்ட எக்ரிமெண்டு, இவைகளின் சரியான நகல்களை சென்னையிலுள்ள இந்தக் கம்பெனியின் ரெஜிஸ்டர்டு ஆபீஸில் அலுவல் பார்க்கும் நேரங்களில் வந்து பார்வையிடலாம்.

மெமொராண்டத்தின் ஒரு நகல் இந்த பிராஸ்பெக்டஸின் ஒரு பாகமாக இத்துடன் சேர்க்கப்பட்டிருக்கிறது.

9. அங்கத்தினர்கள் ஓட்செய்யும் உரிமை.

ஆஜராயிருக்கும் ஒவ்வொரு அங்கத்தினரும், கைதூக்கி ஒவ்வொரு ஓட்டு வழங்க உரிமையுண்டு. "போல்" அல்லது தேர்தலில் ஓட்டுக்கள் நேரிலோ அல்லது "பிராக்ஸி" மூலமாகவோ செய்யலாம்.

தேர்தலில் ஒவ்வொரு அங்கத்தினருக்கும் சாதாரணமாய் (10) பங்குகளுக்கு 1 ஓட் வீதம் ஓட்டு உரிமை உண்டு. ஆனால் மொத்தத்தில் 10-க்குக் குறைந்த பங்குகளே உள்ளவர்களுக்கு 1 ஓட்டும், மொத்தத்தில் 10-க்கு மேற்பட்ட பங்குகள் உள்ளவர்கட்கு ஒவ்வொரு 10 ஷேருக்கும் 1 ஓட்டும், மிகுதியுள்ள 10-க்குக் குறைந்த பங்குகளிருந்தால் அதற்காக ஒரு தனிஓட்டும் செய்ய உரிமை உண்டு.

10. கமிஷன்.

பங்குகளின் சந்தா தொகையில் 100-க்கு 5 அம்சத்துக்கு மேற்படாமல் எந்தக் கமிஷனையும், சந்தா சேர்த்துக் கொடுக்கும் நபருக்கோ அல்லது ஏஜண்டுக்கோ இந்தக் கம்பெனி கொடுக்கலாம்.

பங்குதாரராக ஆவதற்குச் செய்துகொள்ளும் மனுக்கள் இந்தக் கம்பெனியின் போர்டு ஆப் டைரெக்டர்ஸ் விலாசத்திற்குக் கம்பெனியின் அச்சுபாரத்திலோ அல்லது அதற்குச் சரியான அந்த நிபந்தனைகள் உள்ள வேறு பாரங்களிலோ எழுதப்பட்டு அவ்விதம் எடுத்துக்கொள்ளும் பங்கு ஒன்றுக்கு ரூ. 10 சந்தா தொகையுடன் கம்பெனியின் ரிஜிஸ்டர் ஆபீஸில் தாக்கல் செய்யவேண்டும். அவ்விதம் செய்யும் மனுக்களில் குறிப்பிட்ட பங்குகள் அலாட்மெண்ட் செய்யப்படாவிட்டால் மனுவுடன் டெபாஸிட் செய்யப்பட்ட தொகையை வாபீஸ் செய்யப்படும். தவிர மனுவில் குறித்த பங்குகளில் ஒரு பாகம் பங்குகளே அலாட்மெண்ட் செய்யப்பட்டால் மிகுதியுள்ள அலாட்மெண்ட் செய்யப்படாத பங்குகளின் டெபாஸிட் தொகை வாபீஸ் செய்யப்படும்:—

(Sd.) 1. S. P. பூமிநாதன் செட்டியாரவர்கள்.
2. Muthu KR. AR. KR. அருணாசலம் செட்டியாரவர்கள்.
3. Muthu KR. AR. PL. அருணாசலம் செட்டியாரவர்கள்.
4. AL. V. KR. அளகப்ப செட்டியாரவர்கள்.
5. V. முத்தையா செட்டியாரவர்கள்.
6. M. S. மாணிக்கவாசகன் அவர்கள்.

(10-ம் பக்கம் தொடர்ச்சி)

ஆதலால் நாம் காந்திஜீயின் பெயரை ஆதரிக்கிறோமே தவிர திரு. சத்தியமூர்த்தி காட்டுங் காரணங்களினாலன்று.

"வரப்போகும் ஆண்டில் காங்கிரஸ் மந்திரிகள் மிக நெருக்கடியான அரசியல் நிலைமைக்கு ஆளாவார்கள். அப்போது காங்கிரஸ் மகாசபைத் தலைவர் என்ற நிலைமையில் காந்திஜீயின் ஆலோசனைகள் பேருதவியாயிருக்கும்"

என்று திரு. சத்தியமூர்த்தி சொல்கிறார்.

வரப்போகும் காங்கிரஸ் 1938, பெப்ரவரியில் கூடப்போகிறது. அதாவது திரு. சத்தியமூர்த்தி வெளியிட்ட அறிக்கையின் தேதிக்கு ஏழு மாதங்கட்குப் பின் காங்கிரஸ் கூடப் போகிறது. அப்படியாயின் மந்திரிகளின் நெருக்கடியான நிலைமை ஏழு மாதங்கட்குப் பின்னர் அன்றோ ஆரம்பிக்கவேண்டும்? ஆனால் சிலர், மந்திரிகள் நிர்வாகத்தின் கடினமான நிலைமை இப்பொழுதே ஆரம்பித்து விட்டதென்கிறார்கள். தற்போது காந்திஜீ காங்கிரஸ் மகாசபைத் தலைவராக இல்லை என்றாலும், மந்திரிகள் அவரைக் கலந்து ஆலோசனைகள் செய்துகொண்டேதான் வருகிறார்கள். எனவே ஏழு மாதம் வரையிலும் பிரஸிடெண்டு ஆகாமலே காந்திஜீ மந்திரிகட்கு வழி காட்டிக்கொண்டிருக்கலாமெனில், காங்கிரஸ் மகாசபைக் கூட்டத்திற்குப் பின்னரும் அவர்கட்கு வழிகாட்டியாகவும், துணைவராகவும், ஞான போதகராகவுமிருக்க, காந்திஜீ காங்கிரஸின் பிரஸிடெண்டு ஆகவேண்டுமென்பதற்கு என்ன காரணமிருக்கின்றது? ஒன்றுமில்லை.

பதவியேற்புத் தீர்மானத்தைப் பிறப்பித்தவர்களில் முக்கியஸ்தராகிய காந்திஜீ தமது 'ஹரிஜன்' பத்திரிகையில் காங்கிரஸ் மந்திரிகள் பின்பற்ற வேண்டிய வேலைத் திட்டங்களைப் பற்றி இருமுறை எழுதியிருக்கிறார். அவரது அறிக்கைகள் காங்கிரஸ் மந்திரிகட்கு அளிக்கப்பட்டிருக்கும் ஆக்ஞாபத்திரம்—Instrument of Instructions—என்று சொல்லப்படுகின்றன. காங்கிரஸின் பிரஸிடெண்டு ஆகாமலே ஏழு மாதங்கள் வரையிலும் இத்தகைய பெரிய சாஸனங்களை அளிக்கும் அதிகாரத்தை உத்தியோகத் தொடர்பு அற்ற சாதாரண காந்திஜீ பெற்றிருக்கக்கூடுமெனில், ஏழு மாதத்திற்குப் பின்னரும் தமது ஆலோசனைகளை அதிகாரத் தோரணையில் செலுத்த காந்திஜீ மகாசபைத் தலைவர் பதவியை ஏற்றேதான் ஆகவேண்டுமென்பதில்லை. சாதாரண காந்தியினும் பிரஸிடெண்டு காந்தி பெரியவராயும், அறிவிற் சிறந்தவராயும் மாறிவிடப் போவதில்லை.

"காங்கிரஸ் நிர்வாகப் பொறுப்பு அவர் கையிலிருக்குமாகில் மாகாணக் கவர்னர்கள் காங்கிரஸ் மந்திரிகளின் வேலைகளிற் குறுக்கிடுமுன் பல தடவை யோசிப்பார்கள்; தயங்குவார்கள்; தவிர காங்கிரஸ் மந்திரிகள் அவரது தலைமையின் கீழ் புத்துயிர் பெற்று ஊக்கத்துடன் வேலை செய்வார்கள்" என்கின்றார் திரு. சத்தியமூர்த்தி.

ஏழு மாதங்கட்குப் பின் பிரஸிடெண்ட் என்ற நிலைமையில் காந்திஜீ நிர்வாகப் பொறுப்பின் தலைமையை ஏற்றுக்கொள்ளலாமென்று மேலே குறிப்பிடப்பட்டிருக்கிறது.

ஆனால் பிரஸ்தாப ஏழுமாதங்கட்கிடையே கவர்னர்கள் கங்கிரஸ் மந்திரிகளின் நிர்வாகத்தில் தலையிடுவதற்கு பன்முறை ஆலோசிப்பார்கள், துணியமாட்டார்கள் என்று நாம் அனுமானித்துக் கொள்ளலாமா? அவ்வாறன்றி இவ் ஏழுமாதங்கட்கிடையே கவர்னர்கள் மந்திரிமார் நிர்வாகத்தில் குறுக்கிட்டால் இவ் ஏழை மந்திரிகள் என்ன செய்ய வேண்டும்?

வரப்போகும் அரசியல் நெருக்கடியின்போது (வருகிற வருஷம்) காந்திஜீ காங்கிரஸ் நிர்வாகத் தலைமை ஏற்றுக்கொள்வாராகில், காங்கிரஸ் மந்திரிகள் புத்துயிர் பெற்று ஊக்கத்துடன் வேலை செய்வார்கள் என்று திரு. சத்தியமூர்த்தி சொல்லுகிறார். ஆனால் மகாத்மாஜீ மந்திரிகட்கு உபதேசஞ் செய்யும்போதும், வழிகாட்டும் போதும், அவர்கள் புத்துயிர் பெற்று ஊக்கத்துடன் வேலை செய்து கொண்டுதான் வருகிறார்கள். எனவே அவ்வாறு அவர்கட்குத் துணைபுரிய அன்னவர் பிரஸிடெண்டின் பதவி ஏற்றுக்கொள்ள வேண்டுமென்ற நியதியில்லை. அவர்கட்குப் போதிய உதவி செய்யப் பிரெஸிடெண்டுப் பதவி ஏற்றுத்தான் ஆகவேண்டுமெனில், 1937 ஜூலை முதல் பெப்ரவரி 1938 வரையிலுமுள்ள நெருக்கடியான சமயத்தில் மந்திரிமார்களை எவ்வாறு உற்சாகப் படுத்தி வேலைசெய்யத் தூண்டப் போகிறார்? என்ன, ஏழு





மாதங்கள் வரையிலும் காங்கிரஸ் மந்திரிகள் உணர்ச்சியற்று ஊக்கமற்று கிடத்தல்வேண்டும்?

கடைசியாக திரு. சத்தியமூர்த்தி, "வசீகரத் தன்மைவாய்ந்த அவரது தோற்றம் இதர ஐந்து மாகாணங்களிலுமுள்ள சிறுபான்மைக் காங்கிரஸ் கட்சிகளையும் பெரும்பான்மைக் காங்கிரஸ் கட்சிகளாக மாற்றிவிடும்..........." என்கிறார்.

இத்தகைய ஓர் பலனைக் காண்பதற்கு காந்திஜீ காங்கிரஸ் மகாசபையின் தலைவர் பதவி ஏற்றுத்தான் ஆகவேண்டுமா? இப்பொழுது காங்கிரஸ் பிரஸிடெண்ட்டு அல்லாத காரணத்தால் அவரது வசீகர சக்திக்கு ஏதேனும் குறைவு ஏற்பட்டுப் போயிற்று? அவர் பிரஸிடெண்டு ஆகிவிடுவதால் இச்சக்தி அதிகரித்து விடப் போகிறதா? சாதாரண மகாத்மாவாகவே அகில இந்தியச் சுற்றுப்பிரயாணம் செய்தால் திரு. சத்தியமூர்த்தி எதிர்பார்க்கும் பலனை அடைய முடியாதா?

முற்கூறியதுபோல், மகாத்மா காந்திஜியை காங்கிரஸ் பிரஸிடெண்டாகத் தேர்ந்தெடுப்பதை நாம் எதிர்க்கவே இல்லை. ஆனால் அதற்குத் திரு. சத்தியமூர்த்தி காட்டுங் காரணங்கள் முக்கியமானவைகளல்ல வென்றே சொல்கிறோம்.

எந்தச் சமயத்திலும், மகாத்மா காந்தியின் தலைமை நமக்குப் பெருதவியாகவே இருக்கும். காங்கிரஸின் அமைப்பு காந்திஜீயின் விருப்பப்படி அவரது ஆலோசனைகளை அனுசரித்துத் திருத்தியமைக்கப்பட்ட காலையில் அவரது தலைமை பெரிதும் விரும்பக்கூடியதா யிருந்திருக்கலாம். ஆனால் புது அமைப்பைப் பொதுமக்கட்கு நடாத்திக் காண்பிப்பதற்கு, காந்திஜீயையே தலைவராய்த் தேர்ந்தெடுக்க வேண்டுமென்று அப்போது ஒருவருமே யோசனை கூறவில்லை. இஃது குறிப்பிடத் தகுந்ததோர் விஷயமாகும்.

மகாத்மா காந்தி நாட்டிற்கும் காங்கிரசுக்கும் தொண்டு புரிந்திருக்கிறார் என்பதையும், தலைசிறந்த முறையில் இன்னும் அவர் எத்தகைய தொண்டுகளும் புரியவல்லார் என்பதையும் காங்கிரஸ்காரர் எவராலும் மறுக்க இயலாது. ஆனால் செய்ய வேண்டிய கடமைகள் அனைத்தையும் அவர் ஒருவராலேயே தனிமையாகச் செய்து முடித்துவிடலாம் என்பது இயலாத காரியம். மற்றவர்கட்கும் சேவை புரியும் ஆற்றல் அமைந்திருக்கிறது. தேசமும் காங்கிரசும் தமக்குப் போதுமான அளவில் பலரது உழைப்பையும் பயன்படுத்திக் கொள்வதற்காக, மற்றவர்கட்கும் சந்தர்ப்பங்கள் அளிக்கப்படவேண்டும்.

மகாத்மாவைப்பற்றிப் பேசாது விட்டுவிடுவோமாகில், தற்போது ஆற்றல், வசீகரத் தோற்றம், மக்களை இயக்குவிக்குஞ் சக்தி முதலான பல அருங்குணங்கள் வாய்க்கப்பெற்று "ஒத்துழையாமைக் காங்கிரஸின்" அக்கிராசனரா யிருந்தவர்களில் ஒப்பற்றவர் ஸ்ரீ. ஜவஹர்லாலேயாகிறார். அவர் எப்போதுமே பதவி ஏற்பை எதிர்த்து வந்தார் என்பது எல்லோருமறிந்த உண்மை. என்றாலும் நிர்வாகத்தொடர்பற்ற காந்திஜீ, பிரஸிடெண்டு ஜவஹர்லாலையும் வென்று தீர்மானத்தை நிறைவேற்றிக் கொண்டார். இதனால் காங்கிரஸில் பிரஸிடெண்ட்டு பதவி வகிப்பவர் அனைவருக்கும் காந்திஜீ மேலாகவே யிருப்பார் என்றும், அவரது பெயரின் அற்புத சக்தியை அதிகரித்தற்கு அதனுடன் 'பிரஸிடெண்டு' எனும் அடை சேர்க்கப்படவேண்டிய அவசியமில்லையென்றும் அறியக் கிடக்கின்றது.

## காரியக் கமிட்டி 14-உ கூடும்

சில முக்கியமான காரியங்கட்கு இடையூறாக விருப்பதால் பண்டித ஜவஹர்லால் நேரு காங்கிரஸ் காரியக் கமிட்டிக் கூட்டத் தேதியை மாற்றி விட்டார். தற்போது ஆக 14-ந் தேதி வார்தாவில் கூடவேண்டுமென நிர்ணயித்திருக்கிறார்.



## 14-ந் தேதி அகில வங்க அந்தமான் தினம்

வங்காள மாகாண காங்கிரஸ் கமிட்டி ஆகஸ்ட் 14-ந் தேதியன்று அந்தமான் தினத்தைக் கொண்டாடத் தீர்மானித்திருப்பதாகத் தெரிகிறது. அத்தினத்தை அகில இந்திய தினமாய்க் கொண்டாட வேண்டுமென ராஷ்டிரபதி நிர்ணயித்திருக்கிறார்.

சினிமா விமர்சனம்

# பக்த துக்காராம்

(ஆர். சாமிநாதன்)

துக்காராம்! துக்காராம்!! பக்த துக்காராம்!!!—இதுதான் சென்னையில் பெரும் பேச்சு. ஏன்?—பிரபாத் பிலிம் கம்பெனியில் தயாரான பக்த துக்காராம் என்னும் சினிமாப் படம் பிராட்வே டாக்கீஸில் ஓடிக்கொண்டிருக்கிறது. அது மராட்டிப் பாஷைப் படமாயினும் பார்க்கப் போவோர்க்குக் குறைவில்லை. ஒவ்வொரு 'ஷோ'விலும் டிக்கட் கிடைப்பது கஷ்டமாகத் தோற்றுவது சர்வசகஜம்!

துக்காராம் கதையினால் பெரியதா? இல்லை. கதை சாதாரணம்—ஏன் மிகச் சாதாரணமே. சில உலகாயதவாதிகட்குக் கடுகு கூட பிடியாது. கதா ரசிகர்கட்கும் கூட அவ்வளவாக ரசிக்காது.

### கதை

துக்காராம் தம் இரண்டாவது மனைவியுடனும் இரு குழந்தைகளுடனும் வசிக்கிறார். வீட்டில் சர்வ தரித்திரம்—தரித்திரம் வழிந்தே ஒழுகுகிறது. மனைவி அரும்பாடுபட்டு குடும்பத்தை நடத்துகிறாள். அதனால் கடுகடுப்புக் குணமும் ஆசையும் மிகுகின்றன. அந்த வேளையில் துக்காராமோ குடும்பத்தை விட்டு பாண்டுரங்கர் பக்தியில் சொக்கி, சந்யாசம் பூணத்தகுந்த நிலைமைக்குக் கூட போகிறார். ஆனால் அன்பு நிரம்பிய காதல் மனைவி விடுகின்றாளில்லை. குடும்பப் பற்றை வளர்க்க முயல்கின்றாள். அப்போது அவ்வூரிலே ஒரு பிராமண சாஸ்திரி எழும்புகிறார். அவருக்கு துக்காராம் தினந்தினம் செல்வாக்கில் பெருகி வருவது பிடிக்கவில்லை. ஆதலால் பலப்பல சூழ்ச்சிகளைச் செய்து பார்த்துவிட்டு, கடைசியில் சூத்திரனாகிய துக்காராம் உபநிடதங்களை மொழிபெயர்ப்பது தகாதெனக் கிளர்ச்சி செய்கிறார். அவருக்கு ராமேஸ்வர் சாஸ்திரி என்பவர் துணைநிற்கிறார். எனவே இந்திராணி நதியில் துக்காராமின் மொழிபெயர்ப்புகள் எறியப்படுகின்றன. அதனால் மனவருத்தம் மிக்க துக்காராம் குடும்பத்துடன் ஆற்றோரம் பட்டினியாக தவங்கிடக்கின்றார். மெய்யடியவரின் உண்ணாவிரதம் கடவுளர்க்குப் பிடிக்கவில்லைபோலும். ஆற்றில் மூழ்கிய சாஸ்திரங்கள் துக்காராமை அடைகின்றன. இந்தச் செயலால் துக்காராம் புகழ் முன்னிலும் பன்மடங்கு பெருகிவிட, சிவாஜி மகாராஜா பக்தனைப்பார்க்க விரும்புகிறார். பக்தன் ஒரு நாள் பாண்டுரங்கர் ஆலயத்தில் சிவாஜியைச் சந்திக்கிறார். அதனைப் பார்த்த பிராமண சாஸ்திரி பொறாமை மேலிட்டு சிவாஜியின் சத்ருக்களாகிய முஸ்லிம்களை ஏவி சிவாஜியையே வதம் செய்யத் தூண்டுகிறார். முஸ்லிம்கள் சிவாஜியை நாடுகிறார்கள். அங்கு, துக்காராம் தியானத்தால் முஸ்லிம்கள் கண்ணுக்கு பார்ப்பவர்களெல்லாம் சிவாஜியாகத் தோற்றும்படி செய்கிறார். அதனால் சாஸ்திரி கருத்து நிறைவேறவில்லை.

இவ்வாறு பல அற்புதங்களைப் புரிந்த துக்காராம் பொது ஜனங்களின் கண்ணுக்கணியாக விளங்கும் நாளில் மகாவிஷ்ணுவின் வாகனமாகிய கருடன் பூலோகத்தையடைந்து துக்காராமை வைகுண்டத்திற்கு அழைத்துச் செல்கிறது.

### அற்புதம் என்ன?

இதுதான் கதை. இக்கதைக்காக எவரும் துக்காராமைப் பார்க்கப் போகவில்லை. விசேஷமாக—நான் கதையை எண்ணி துக்காராமைப் போற்றவில்லை. ஆனால் இருக்கும் அற்புதமென்ன என்றால் டயரக்ஷன், நடிப்பு, அமைப்பு, ஒலிப்பதிவு, போடோகிராபி முதலிய எல்லா சினிமா அம்சமும் கண், காது வழியாக மனதை இழுத்துவிடுகின்றன.

### யாருக்கு யார் மேல்?

நடிப்பில் யாருக்கு முதல் ஸ்தானம் கொடுப்பது என்பது ஆயிரம் நாளானாலும் முடிவு செய்துவிடத் தகுந்த காரியமல்ல. ஒவ்வொருவரும் மிக மிக மிக........நன்றாக நடிக்கிறார்கள். நடிகர்களைத் தேர்ந்தெடுப்பதுதான் சினிமாப் பட வெற்றியின் முதல் சாதனம் என்பதைத் துக்காராமிலிருந்து சந்தேகமறத் தெரிந்துகொள்ளலாம். துக்காராமைப் பார்த்தால் முகத்தில்—ஏன் உடம்பு முழுதுமே பக்திச் சுவை வழிந்தாற்போலிருக்கிறது. அவரது நடை, உடை, பாவனை, பேச்சு எல்லாம் பரம பக்தனுடைய அம்சங்களாயிருக்கின்றன. துக்காராமாக நடிக்கும் திரு. விஷ்ணுபந்த் பாக்கினீஸின் முகம் இயல்பிலேயே வசீகரமுடையதாயிருப்பதோடு அமைதியும், சாந்தமும் பக்தியும் சொட்டும் தகைமைத்தாயிருக்கிறது. அவர் பக்தி மிகுதியால் பாடுவதும் ஆடுவதும் பார்த்துப் பார்த்து எண்ணி எண்ணி மகிழத்தக்கவை. பாட்டில் பெரிய நிபுணர் என்பது, அவரது கானங்களைக் கூர்ந்து கேட்டு ஆரோகண அவரோகணங்களை அலசிப் பார்ப்பார்க்கு விளங்கும். ஆனால் அவர் சங்கீதம் தம் பக்தியைக் கெடுத்துவிடாத மாதிரியில் பார்த்துக்கொள்கிறார். இதுதான் பிரபாத் கம்பனியின் நயம்!





### மிஸ். கௌரி

துக்காராமின் மனைவியாக நடிக்கும் மிஸ் கௌரி நினைக்கமுடியாத ஒரு நடிகை. அம்மாது தாமாக நடிக்கின்றாரோ அல்லது நடிப்பே அவராகப்பிறந்திருக்கிறதா வென்பது என் சந்தேகம். ஜிஜாயி (கௌரி நடிக்கும் கதாபாத்திரம்) கணவனிடத்தில் "கடு கடு" என்று பேசுகிறாள்; ஆனால் மனத்திற்குள் காதல் வெள்ளம் ஊறிநிற்கிறது. மக்களிடம் ராக்ஷசிபோல் நடந்துகொள்கிறாள்; ஆனால் உத்தம மாதாவின் அன்பு ததும்பி வழிகிறது. வறுமையால் பேராசை கொள்கிறாள்; ஆனால் புருஷன் அறிவுறுத்தலால் பரம ஏழையாக வாழ இசைகிறாள். கடவுளைப் பஜனை செய்வது கடுகு கூட பிடியாதவள் போல் புருஷனைக் கடிகின்றாள்; ஆனால் புருஷன் கடவுளை நினைந்து வருந்தும்போது அவரது அடிச்சுவடுபற்றி உண்ணாவிரதமிருக்கிறாள். ஆ! என்ன நடிப்பு!

உத்தமமான தாய்! கற்புமிக்க மங்கை! உழைப்பு நிறைந்த இல்லாள்! கணவனைப் பராமரிக்கும் கண்ணிய மனைவி!—இவ் எல்லா இயல்பும் திரண்ட ஜிஜாயியின் நடிப்பை எப்படி புகழ்வது? சுருக்கத்தில் பிரபாத் நயம் என்றே சொல்ல வேண்டும்.

காட்டில் புருஷனுக்காக உணவு கொண்டு செல்லும்போது காலில் முள் குத்திவிடுகிறது. அதனை ஒரு கிழவன் எடுக்கிறான். அப்போது அவளது நடிப்பு ஆம்—அபாரம்! அபாரம்!

முள்ளெடுத்து முடிந்ததும், "அம்மா" என்ற பெருமூச்சோடு எழுந்து போக வேண்டுவதுதானே முறை? ஜிஜாயி அப்படி செய்கின்றாளில்லை. பெருமூச்சுவிட்ட பின்னர் முகத்தில் வியர்வையைத் துடைக்கிறாள்! எவ்வளவு இயற்கையான நடிப்பு! சாதாரண டயரக்டர்கட்கு இந்த நுட்பத்தில் மதிபோகுமா? இதுதான் பிரபாத் நயம்!

அப்பால் ஜிஜாயி காட்டுக்குச் சென்று தியானத்திலிருக்கும் தன் புருஷனைச் சந்திக்கிறாள். அந்த வேளையில் பிரபாத் நயம் எப்படி வேலை செய்கிறது பாருங்கள்!—

டயரக்டர், துக்காராம் தியானத்திலிருக்கும் மரத்தையும், அது நிற்குமிடத்தையும் காண்பிக்க விரும்புகிறார் போலும். அதப்படியாயின் முதலில் துக்காராமையும் பின் அவர் உட்கார்ந்திருக்குமிடத்தையும்தானே காண்பிக்க வேண்டும்? அப்படிச் செய்யவில்லை பிரபாத் 'காமிராமான்' அவர். முதலில் மரக்கிளைகளைக் காண்பிக்கிறார். அதிலிருந்து (மரக்கிளைகளிலிருந்து) அழகான பட்சிகள் பாடிப் பறக்கின்றன. பல புட்கள் உட்கார்ந்து ஒலி செய்கின்றன. அழகிய கிளைகள் பார்ப்போரை வரவேற்கின்றன. ஏராளமான புறாக்கள் பறந்து வந்து துக்காராமின் பக்கத்தில் உட்கார்கின்றன. அப்போது தெரிகிறது துக்காராம் மரத்தடியில் யோக நிஷ்டையில் இருப்பது. எனவே பெறப்படுவதென்னவென்றால் மரக் கிளையையும் பறவைகளையும் பார்த்ததும், நம் மனம் இயற்கைக் காட்சியில் லயித்து, நிம்மதியுற்று பக்குவமடைந்து விடுகிறது. அப்போது தோற்றுகிறார் துக்காராம். ஆகவே அவரிடம் Saintliness (பரிசுத்தமுடைமை) அமைதி, இயற்கையோடிணைந்த வாழ்க்கையெல்லாம் பொருந்தியிருப்பது விளங்குகின்றது. அதோடு காட்டுப் புறாக்கள் பக்கத்தில் வந்துட்கார்வதால் துக்காராம் பரமஞானி என்ற எண்ணம் நம் மனதில் சொல்லாமலே உண்டாகிவிடுகிறது. என்னே பிரபாத் நயம்!

அதன்பின் ஜிஜாயி வருகிறாள். அவள் புருஷனண்டை வந்து தியானத்தைக் கலைத்து உணவைக் கொடுக்கிறாள். துக்காராம் கண்ணைத் திறந்ததும், தம் அருமை மனைவி வெகு தொலை நடந்து, தன்னுழைப்பால் தேடிய உணவைக் கொண்டு வந்திருப்பதைக் காண்கிறான். உடன் மகிழ்ந்து சாப்பிடு முன்பு,—தம் அருமைக் காதலியல்லவா! ஜிஜாயிக்கு ஒரு துண்டு அடையை எடுத்து வாயில் கொடுக்க முயல்கிறான். ஜிஜாயி உத்தமக் கிரக நாயகிக்குரிய நாணத்தைக் காண்பித்து, வேண்டாமென மறுக்கிறாள். அந்தவிடத்தில் என்ன நடிப்பு! பிரபாத் நடிப்பே தோற்றுகிறது என்று சொல்லவேண்டும்.

ஜிஜாயி சற்று நேரம் மறுக்கவும் துக்காராம் விடுகின்றானில்லை. கடைசியில் ஜிஜாயி புருஷன் ஆசைக்குப் பணிய முயல்கிறாள். முயன்றால் வாசகர்காள்! துக்காராம் கையினால் வாயில் கொடுக்க முயன்ற உணவை வாயினால் பற்றிக்கொள்ள வேண்டுவதுதானே முறை!—அப்படி செய்கிறாளில்லை ஜிஜாயி! தன் கையினால் அடையை வாங்கி வாயில் போட்டு மெல்கிறாள்! நீங்கள் கூர்ந்து பார்த்தால் நாணமுள்ள மனைவியர் அவ்வாறுதான் செய்வார்கள் என்பதைக் கண்டுகொள்வீர்கள். இதனைக் குறைவறக் காண்பிக்கின்றதன்றோ பிரபாத் பிலிம்! என்னே பிரபாத் நயம்!

இவ்வாறே பிரபாத் கம்பெனியின் நயம் துலங்காத இடம் ஒன்று கூட துக்காராமிலில்லை!

### மற்றையோர்

இன்னும் சாலோமலோ வருகிறாரே, அவர் 'ஆக்டிங்' நிகருண்டா? அவரது கிளார்க்காக இருந்து எழுதுகிறானே ஒருவன், அவன் ஆக்டைக்

கண்டு யார்தான் சிரியார்? குழந்தைகள் வருகின்றனவே, அவற்றை யார்தான் ஆசைப்படார்? தாசி வருகிறுளே, அவள் நடிப்பை காதலியாதவரிருக்க முடியுமா? எல்லாம் போக, சிவாஜி வருகிருரே;—அம்மம்மா! நீங்கள் பார்த்தால் 1726-ல் பிறந்த சிவாஜி இன்னும் பிரபாதில் இறந்து போகவில்லையென்றே சொல்வீர்கள்! அப்படிப்பட்ட சிவாஜிகள் நூருயிரவரைக் காண்பிக்கின்றதே பிலிம், அதற்கு என்ன சொல்வீர்கள்!

அதெல்லாம் போக முகலாயர் சிவாஜியைத் தேடித் திரியும் காட்சியும் அதுபோது துக்காராம் பஜனை செய்யும் மாதிரியும் எந்த உலகாயுதவாதியின் மனதையும் புரட்டிவிடும். முகலாயர் ஓடும் சீன்கள் நொடிக்குப் பத்தாக துண்டு துண்டாய்க் காண்பிக்கப்படுகிறது. அவ்வாறு காண்பிப்பதால் பார்ப்பவர் மனதில் பரபரப்பும், திடீர் திடீரென்ற உணர்ச்சியும் ஏற்படுகின்றன. அதனிடையே உணர்ச்சி மிக்க, ஆத்திர மிக்க துக்காராமின் பஜனை முழங்குகிறது. இந்த விடம்தான் துக்காராமில் Climax—உச்சஸ்தானம். அவ் உச்சஸ்தானம் உச்சஸ்தானமாகவே பிரகாசிப்பது ஆம்! எவ்வளவு பெரிய பிரபாத் நயம்!

இப்படியே நீட்டி எழுத ஊழியன் ஆசிரியர் இடம் தருவாரா வென்பது சந்தேகம். ஆகவே நிறுத்துகிறேன். முடித்துக் கூறினால், பிரபாத் கம்பனி துக்காராம் மூலம் தன் பெருமையை ஒரு முறைகூட விளக்கிக்கொண்டது.

அப்படத்தை வெனிஸ் படக்காட்சிக்கு அனுப்பியிருக்கிருர்களென்றால் ஆச்சரியமே இல்லை.



## "உதவி புரிவது உமது கடன்"

ராஷ்ட்ரபதியின் வேண்டுகோள்

ஆகஸ்டு 8 தேதி யன்று பம்பாய், அஜாத் மைதானத்தில் 55000 பேர் அடங்கின ஒரு பிரமாண்டமான கூட்டத்தில் ராஷ்ட்டிரபதி ஜவஹர்லால் காங்கிரஸ் மந்திரி சபைகளை ஆதரிக்கும் விஷயமாய்க் கீழ் வருமாறு பேசினர்:—

"காங்கிரஸ் மந்திரிகட்கு நேரிடும் அவமானம் நமக்கு நேரிடும் அவமானமேயாகும். ஏனெனில் அவர்கள் நமது பிரதிநிதிகளாவதுடன், நமது ஊழியர்களும் ஆகிருர்கள். மாகாண சுயாட்சி என்னும் மிகச் சுருங்கின அதிகார எல்லைக்குள் அவர்கள் வேலை செய்ய வேண்டியவர்களாகிருர்கள். ஆதலால் அவரது உழைப்பிற்கு தீங்கு நேரிடாத முறையில் நாம் அவர்கட்கு நிர்மாண ரீதியில் ஆலோசனைகள் சொல்லி வழிகாட்ட வேண்டும். அவர்களுடன் ஒத்துழைத்து அவர்களாலாவதை நிறைவேற்றி வைக்கச் செய்யவேண்டும். உங்கள் மூலமாகவே அவர்கள் பதவியேற்ருர்கள். உங்களுக்காகவே அவர்கள் மந்திரிகளாயிருக்கிருர்கள். அவர்கள் அங்கே யிருப்பதால் பயன் இல்லை என்ருல் அவர்களை அங்கிருந்து அகற்றுவதற்குக் காங்கிரசை இயக்குவித்து அதன் மனோ நிலைமையை மாற்றுங்கள்.

"பதவி ஏற்றல் நமது சுதந்திரப் போராட்டத்தின் முடிபன்று. அதன் ஆரம்பமும் அன்று. உண்மையான போர் இன்னும் ஆரம்பமாகவில்லை. இவைகள் எல்லாம் அப்பெரிய போராட்டத்திற்குரிய சிறு முயற்சிகளே யாகும். நமது லட்சியம் உண்மையான, சுதந்திரமாகும். பதவி ஏற்பு அந்த லட்சியத்திற்கு நம்மைக் கொண்டு செல்லும் மார்க்கமே யாகும். அவ்வழி சரியாகவோ, தவருகவோ யிருக்கலாம். அதைப் பற்றிச் சொல்லத் துணிந்து விட்டோமாகையால் நிலைமையைப் பரிசீலனை செய்யவேண்டியதவசியம்."

## காரைக்குடி முனிசிபாலிடி

உபதலைவர் மீது நம்பிக்கையில்லாத் தீர்மானம்

இருவர் மீது மான நஷ்ட தாவா

சென்னை, ஆக 9—

சென்னை ஏப்ரல் 20-ந் தேதியன்று காரைக்குடி முனிசிபல் சபைக் கூட்டம் நடந்தபோது எம். ஆர். எம். எஸ். பெரியண்ணன் செட்டியார் சபையின் உதவித் தலைவரான டாக்டர் சுப்பிரமணியத்தின் மீது நம்பிக்கையில்லாத் தீர்மான மொன்று கொண்டு வந்தார். அதை எஸ். பி. என். எம். முகம்மது இப்ராஹீம் ராவுத்தர் ஆமோதித்தார். தீர்மானத்தை பிரேரித்தவரும் அதை ஆமோதித்தவரும் தமக்கு மான நஷ்டமுண்டாக்கக் கூடிய வழியில் பேசினர்களென டாக்டர் சுப்பிரமணியம் ஸப் டிவிஷனல் மாஜிஸ்திரேட்டு முன்பாக மானநஷ்டத்தாவா தொடர்ந்தார்.

வழக்கு விசாரணைக்கு எடுத்துக் கொள்ளப்பட்டபோது பிரதிவாதிகள் பூர்வாங்க ஆட்சேபனை கிளப்பினர்கள். முனிசிபல் சபையில் பேசும் போது குற்றம் புரிவோர்கள் மீது சர்க்கார் உத்தரவில்லாமல் நடவடிக்கை எடுத்துக்கொள்ளக் கூடாதென பிரதிவாதிகள் கூறினர்கள். அந்த ஆட்சேபனையை சப் டிவிஷனல் மாஜிஸ்திரேட்டு தள்ளிவிட்டார்.

இதற்குமேல் ஹைக்கோர்ட்டில் ஜஸ்டிஸ் கிங் முன்பாக ரிவிஷன் மனு கொண்டு வரப்பட்டது. நீதிபதி, மனுவை ஏற்றுக் கொண்டு கீழ்க் கோர்ட்டு நடவடிக்கைகளை தற்காலிகமாக நிறுத்தி வைக்கும்படி உத்தரவிட்டார்.

ஸ்ரீமான்கள் கே. நரஸிம்ம ஐயங்காரும், கே. எஸ். சுந்திரமும் மனுதார் தரப்பில் ஆஜராஞர்கள்.

எதிர்பாருங்கள்!



எதிர்பாருங்கள்!!

சென்னை

# ராஜேந்திரா பிலிம் கம்பெனியின்

முதல் தமிழ்ப் பேசும் சமூகப் படம்

| | |
|---|---|
| தேசீயம்! | தியாகம்! |
| பகுத்தறிவியல்! | காதல்! |
| ஹரிஜன சேவை! | வேலையின்மை! |

முதலிய

அரிய கொள்கைகளைக் காட்டுவது

# ஸ்வர்ணலதா

கண்ணியமும் நடிப்புத் திறமையும்

வாய்ந்த சீமான்களும் சீமாட்டிகளும்

- - நடிக்கின்றனர் - -



## வெளிவரும் நன்னாளை ஆவலுடன்

எதிர்பாருங்கள்!

தந்தி: 'இந்திரா' தி ராஜேந்திரா பிலிம் கம்பெனி லிமிடெட், போன்: 8444. தபால் பெட்டி 609.

15, மௌப்ரேஸ் ரோடு, : : : : மைலாப்பூர், சென்னை.

Printed and published by Rama Kasinathan for the India Publications Ltd., at the Oolian Power Press. 56, Thambu Chetty Street, Madras.

